இன்பமயமான
கனவுக் காட்சி...
மபத்லால்
துணிமணிகளின்
ஆட்சி!

**மபத்லால் க்ரூப்** அளிக்கும்
நேர்த்தியான துணிமணிகள்
**டெரோலெல்**
பாலியெஸ்டர் இழைகலந்த
ஷர்ட்டிங்குகள்
**டெரோஃபில்**
பாலியெஸ்டர் ஃபிலமெண்ட்
யார்ன் துணிகள்
**எஸ்டர்காட்**
பாலியெஸ்டர் இழைகலந்த
ஸுட்டிங்குகள்
**மபத்லால் அப்பேரல்** அளிக்கும்
கவர்ச்சிமிக்க ரெடிமேட் ஆடைகள்




AIYARS-M.434 TM

# பயணமும் சுகம், பத்திரமும் அதிகம்!

இப்போது நீங்கள் பஸ்களில் பத்திரமாகவும், நிம்மதியாகவும் பிரயாணம் செய்யலாம். காரணம், பஸ்களில் இப்போது காற்றழுத்த பிரேக்குகள் பொருத்தப்பட்டிருப்பதுதான்.

இந்தியாவில் தயாராகும் நவீன கமர்ஷியல் மற்றும் ஹெவி வண்டிகளில் — பஸ்கள், லாரிகள், டிரெய்லர்கள், டிராக்டர்கள், எர்த் மூவர்கள் ஆகியவற்றில் — காற்றழுத்த பிரேக்குகளே பொருத்தப்பட்டுள்ளன. ஏனெனில் அவை அதிகத் திறன் வாய்ந்தவை. சட்டென்று இயங்குபவை. இயக்குவதற்கும் எளிதானவை.

**CD-TVS ஃபுல் — ஏர் மற்றும் ஏர்-அஸிஸ்ட் பிரேக் ஆக்சுவேஷன் சாதனங்களையும், அவற்றுக்கான அசல் உதிரி உறுப்புகளையும் தயாரிக்கிறார்கள்.**



சாலைப் பாதுகாப்புக்கு
ஒரு சின்னம்

**சுந்தரம்-க்ளேட்டன் லிமிடெட்**
(டிவிஎஸ் தொகுப்பைச் சேர்ந்த நிறுவனங்களில் ஒன்று)
பாடி, சென்னை 600 050

FDS SC 1961 TH.

# வீடு கட்டுகிறீர்களா?

# ஸ்டீல் டியூப் உலகில் ஏன் ITC குறிப்புள்ள டியூபுகள் நம்பக மிகுந்தவை என்பதற்கு 5 காரணங்கள் இதோ:

**1** ITC டியூபுகள் IS:1239 (பகுதி I)-1968ல் குறித்துள்ள சுவர்க்கன அளவைப் பெற்றிருக்கின்றன. இது ஒழுங்கான திருகுமறையுடன் பலமாக அழுத்தி இறுகிய இணைப்புகளை நிச்சயப்படுத்துகிறது. டியூபுகளை நீடித்திருக்கவும் செய்கிறது.

டியூபுகள் உங்கள் புதிய வீட்டிற்கு வாழ்நாள் முழுவதுமான சேவை வழங்கும்... வாழ்நாள் முழுவதற்குமான முதலீடு

ITC

டியூபுகளில் நம்பக மிகுந்த வியாபாரக்குறி

தி இண்டியன் டியூப் கம்பெனி லிமிடெட்

ஒரு டாடா-ஸ்டூவர்ட்ஸ் அண்டு லாயிட்ஸ் முயற்சி

**2** ITC டியூபுகள் 'ஹாட்' தொடர் வெல்டிங் செய்முறையில் தயாரிக்கப்படுகின்றன. இதன் விளைவாக, வெல்டுஜீம் பிளவுபடாமல் 'கோல்டு-பெண்ட்' (சூடு பண்ணாமல் வளைக்கச்) செய்யலாம்.

**3** ITC டியூபுகள் 'ஹாட்' வெல்டிங் செய்முறையின் விதிப்படியான பயனால் ஒரே சீரான அழுத்தம் கொண்டுள்ளன. வெல்டிங் செய்த இடத்தில் வழக்கமான அரித்தல் மூலம் பாதிக்கப்படாது. இதுவும் டியூபுகளை நீடித்திருக்கச் செய்கிறது.

**4** ITC டியூபுகளுக்கு உள் வெல்டிங் ரிட்ஜ் (வரம்பு) கிடையாது. எனவே, நீக்கப்பட்ட சிறு பொருள் சிக்கி அடைத்துக்கொள்ளாமல் தடங்கலின்றி ஓட முடிகிறது.

**5** ITC டியூபுகளை, (டாடா பைப்ஸ் எனப் புகழ்பெற்ற) அவற்றின் மீது 1மீட்டர் இடைவெளிக்கு ஒன்றாகவிருக்கும் ITC குறி மூலம் சுலபமாக அடையாளம் கண்டுகொள்ளலாம். மீடியம் டியூபுகள்மேல் "M" குறியும் போடப்பட்டிருக்கிறது. இது இலேசான மற்றும் கனமான ரகங்களிலிருந்து தனிப்பட இதனை தெரிந்துகொள்ளுவதற்கு—வாடிக்கைக்காரரின் சௌகரியத்திற்கான விசேஷ சேவை.

ITC-193 TAM

# கல்கி



''கல்கி''யில் வெளி வரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

## பொருளடக்கம்

பிரமாதீச, பங்குனி 18, ■ மார்ச் 31, 1974




| கல்கி சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
| --- | --- | --- |
| இந்தியா | ரூ. 26-00 | ரூ. 13-00 |
| இதர நாடுகள் | ரூ. 55-00 | ரூ. 27-50 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 30-00 | ரூ. 15-00 |

## கோடையில்—
## சாதாரணமான சருமம்...
## வாடிவிடும் வியர்க்குருவினுல்..






நைஸில்*
கிளாக்ஸோ தயாரிப்பு
*டிரேடு மார்க்

## காலையிலே குளித்தபின்...
## மேனிமீது தூவித் தெளிப்பீர்
## நைஸில் பவுடரை



## வேர்க்குரு என்ருல்
## வீசை என்ன விலை
## என்று கேட்பீர்கள்!

அபரிமிதமான வியர்வையினுல் சருமத் துவாரங்கள் அடைபடும் போது, யாரும் வியர்க்குருவினுல் அவதிப் படுவார்கள் என மருத்துவ ஆராய்ச்சிகள் காட்டுகின்றன, எரிச்சலும் அரிப்பும் ஏற்படுகின்றன; சருமம் பாதிக்கப் படுகிறது. இதனை எதிர்த்துப் போராடும் குளோர் பென்ஸின் மற்றும் போரிக் பவுடர் அடங்கியது நைஸில் 'ப்ளூ' ஒன்றுதான்-அதோடு உங்கள் சருமத்திற்குப் பாதுகாப்புத் தரும் ஸிங்க் ஆக்ஸைடும் அதில் அடங்கியுள்ளது.

SISTA'S-GN-410-TAM B

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா -- பாரதியார்



மலர் 33 -- இதழ் 35

# வன்முறையின் தாண்டவம்

குஜராத்திலிருந்து பீஹார், பீஹாரிலிருந்து உத்தரப் பிரதேசம் என்று வன்முறையின் கோரத் தாண்டவம் வேகமாக நாட்டில் பரவி வருவதைக் கண்டு யாரும் மனம் வெதும்புவர். மாணவர்கள் கிளர்ச்சியில் ஆரம்பித்து, அரசியல் கட்சிகளின் உடந்தை, ஊக்குதலுடன் விரிவுபெற்று, சட்டசபை மறியல், கொள்ளை, தீ வைத்தல் என்று பயங்கர முறையில் இந்தக் கோரத் தாண்டவம் தலைவிரித்தாடுகிறது.

இந்நிலைமைக்குக் காரணங்கள் திடீரென்று தோன்றியவை அல்ல. விலைவாசி உயர்வும், உணவுப் பண்டங்களுக்குத் தட்டுப்பாடும், படித்தவர்களிடையே வேலையில்லாத் திண்டாட்டமும், மக்களிடையே பரவலாகக் காணப்படும் நிராசையும், ஏக்கமும், அதே சூழ்நிலையில், அதிகார அரசியல் வர்க்கத்தினரிடையே காணப்படும் ஊழல்களும் நீண்ட காலமாகவே நமது நாட்டில் கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து கொண்டு வருகின்றன. இப்போது பொறுத்துக் கொள்ள முடியாத அளவுக்கு வளர்ந்து விட்டன.

இவற்றையெல்லாம் ஆளும் கட்சியினரும் நன்றாகவே உணர்ந்துகொண்டுதான் இருக்கின்றனர். ஆனால் நிலைமையைக் கட்டுப்படுத்தவோ, சமாளிக்கவோ ஆளும் கட்சியினால் இது வரையில் முடியவில்லை என்பதை மறைப்பதற்கில்லை. தவறான கொள்கைகளினால், பொருளாதாரத் துறையிலும் அரசியல் துறையிலும் ஊழலும் கேடும் வளருகின்றன என்றால், அக் கொள்கைகளை மாற்றிக் கொள்ள வேண்டும். அதற்கு இப்போதுள்ள ஆட்சி போதிய தைரியம் காட்டவில்லை. இந்த நிலையில் கிளர்ச்சி செய்தாலொழிய, ஆட்சியாளர்களின் சுரணையைத் தூண்டிவிட முடியாது என்ற அவல நிலைமையில் கிளர்ச்சிகள் தோன்றுகின்றன.

ஜனநாயகத்தில் நம்பிக்கை இல்லாத கட்சிகளுக்கு இத்தகைய நிலைதான் மிகவும் பிடித்தமான நிலை. அதைப் பயன்படுத்தி ஜனநாயகத்தைக் குலைக்கவே அவை முற்படும். அத்தகைய சக்திகள் நம் நாட்டில் இருக்கின்றன. மிக பலம்பொருந்தியவையாகவும் இருக்கின்றன. புரட்சியை மலர் மாலையுடன் வரவேற்பவர்கள் இவர்கள், ஆனால் நமது பாரதப் பண்பிலும் ஜனநாயக முறையிலும் சீரான நெறிமுறைகளிலும் பற்றுக் கொண்டுள்ள எவர்க்கும் இந்நிலை வேதனையையே அளிக்கும். ஜனநாயகத்தில் ஆழ்ந்தபற்றுள்ளவர்கள் நம் நாட்டில்எத்தனையோ பேர் இருக்கின்றனர். அரசாங்கம் தனது தவறான கொள்கைகளை மாற்றிக் கொள்ள முன்வந்தால், அவர்களின் ஆதரவு அரசாங்கத்துக்குக் கிடைக்கும். சீர்கெட்டுப் போயிருக்கும் பயங்கரப் பொருளாதார நெருக்கடியைச் சமாளிக்க அரசாங்கம் உண்மையாகவே பாடுபடுகிறது என்ற நம்பிக்கை மக்களுக்கு ஏற்பட வேண்டும்.

நிதி அமைச்சர் பட்ஜெட் விவாதத்துக்குப் பதில் அளித்ததிலிருந்தும், நிதிப் பற்றாக்குறையைச் சரிக்கட்ட முடியாது என்பதிலிருந்தும், பொருளாதார நிலைமை அபிவிருத்தியடையும் என்று நம்புவதற்கில்லை. ஆண்டுக்கு இருபது அல்லது இருபத்தைந்து சதவீதம் விலைவாசிகள் ஏறிக் கொண்டுதான் போகும் என்றுதான் எண்ண வேண்டியிருக்கிறது.

பிரதமர் இந்திரா காந்தி இத்தகைய நெருக்கடியான சூழ்நிலையில், எதிர்க்கட்சிகளின் ஒத்துழைப்பைக் கோருவதைக் காட்டிலும், நாட்டில் உள்ள கட்சிச் சார்பற்ற, ஆனால் நிர்வாகத் திறமையும் பொருளாதார அறிவும் நிரம்பப் பெற்றுள்ளவர்களை அமைச்சர்களாக்கி, அவர்களுடைய ஒத்துழைப்பின் மூலம் நிலைமையைச் சமாளிக்க முயலுவது விவேகமாகும். கட்சிச் சார்புள்ள அரசாங்கத்தைக் காட்டிலும், கட்சிச் சார்பற்ற தேசிய அரசாங்கம் அமைக்க நாட்டில் இப்போதுள்ள அராஜக நிலை ஒரு வாய்ப்பளிக்கிறது.

# தமிழ் நாட்டிலே...

தீரன்

## வாழ்த்துகிறோம்

தமிழ்நாடு சட்ட சபையிலிருந்து ராஜ்ய சபைக்கு முன்னாள் கண்ட்ரோலரும் ஆடிட்டர் ஜெனரலுமான திரு எஸ். ரங்கநாதன் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். இந்தத் தேர்தலில் விசேஷ அம்சம் திரு எஸ். ரங்கநாதன், எந்தக் கட்சியின் சார்பிலுமில்லாத சுயேச்சை அபேட்சகராகவேதான் போட்டியிட்டார். எனினும், வெற்றிக்கு 32 ஓட்டுகளே பெற்றால் போதும் என்று இருந்தும், மற்றெல்லா அபேட்சகர்களைக் காட்டிலும் அதிகமாக 41 முதல் ஓட்டுகளை அவர் பெற்றுள்ளார். அவர் மகத்தான வெற்றிக்கு எல்லாக் கட்சிகளும் ஒத்துழைத்துள்ளன.

தமது பதவிக் காலத்தில் நேர்மைக்கும் திறமைக்கும் எடுத்துக்காட்டாக விளங்கியவர் திரு எஸ். ரங்கநாதன். ஓய்வு பெற்றபின் சென்னை அசோக் லேலண்ட் மோட்டார் கம்பெனியின் தலைவராகப் பணியாற்றியுள்ளார். நேர்மைக்குக் கிடைத்த நற்சான்று என்று கருதக்கூடியது இப்பிரதிநிதித்துவக் கௌரவம். எஸ். ரங்கநாதனின் அடுத்த ஆறாண்டு பதவிக் காலம் நாட்டின் சேவைக்குப் பயனுள்ளதாக விளங்கட்டும்.

## இப்படியும் ஒருவகை மிரட்டல்

தமிழ்நாட்டைச் சேர்ந்த சில வலது கம்யூனிஸ்ட் கட்சிப் பிரமுகர்கள் சில நாட்களாகப் புதுவிதமான மிரட்டல் ஒன்றில் இறங்கியிருப்பதாகத் தெரிகிறது.

''பாண்டிச்சேரி மந்திரி சபைக்கு ஏதேனும் ஆபத்து வருமானால் உ. பி.யிலும் ஒரிஸ்ஸாவிலும் உள்ள காங்கிரஸ் அரசாங்கங்களுக்கும் அதே ஆபத்தை உண்டாக்குவதற்கு எங்களுக்கு அதிக நேரம் பிடிக்காது''—

இது மத்திய அரசாங்கத்துக்கும் அதை ஆளும் கட்சியாகிய காங்கிரஸ் கட்சிக்கும் கம்யூனிஸ்டுகளின் மிரட்டல். இந்த மிரட்டலிலிருந்தாவது காங்கிரஸ் கட்சி கம்யூனிஸ்டுகளைப் புரிந்து கொண்டால் சரிதான். காங்கிரஸ் மட்டுமல்லாமல் இந்தக் கம்யூனிஸ்டுகளால் வரும் அபாயத்தை அ.தி.மு.க.வும் புரிந்து கொண்டால்தான் புத்திசாலித்தனம்.

## ரேஷன் கார்டுகள் விநியோகம்

சென்னை நகர மக்களுக்குச் சர்க்கரை, அரிசி முதலியவற்றுக்கான புதிய ரேஷன் கார்டுகளைப் பெறுவதற்கான நாளும் நேரமும் இடமும், எந்த எண் முதல் எந்த எண் வரை உள்ள கார்டுகளை எங்கே பெறலாம் என்ற விவரமும் சிவில் சப்ளைஸ் கார்ப்பொரேஷனால் அறிவிக்கப்பட்டிருந்தது.

அந்த அறிவிப்பை நம்பி வேறு வேலைகளையும் மறந்து கார்டு பெறப் போனவர்களில் பலர் நாள் முழுவதும் கால் கடுக்கக் கியூவில் நின்றுவிட்டு முடிவில் ஏமாற்றத்தோடு வீடு திரும்பும்படி ஆயிற்று. ஒரே குழப்பம். பழைய கார்டில் ஆறு கிலோ சர்க்கரை போட்டிருந்தவர்களுக்குப் புதிய கார்டில் நான்கு கிலோ மட்டுமே போட்டிருந்தது. சிலருடைய பேருக்குப் புதிய கார்டுகளே இல்லை.

மறு நாளே சிவில் சப்ளைஸ் கார்ப்பொரேஷனுக்குப் புத்தி வந்ததோ என்னவோ கார்டுகளைப் பெற்றுக் கொள்வதற்கு மேலும் சில நாட்களைக் குறிப்பிட்டுப் பத்திரிகைகளில் அறிவிப்பு வந்தது. அதன்பிறகு மீண்டும் ''யாரும் எங்கும் போய் நிற்க வேண்டியதில்லை. அவரவர் வீடுகளிலேயே ரேஷன் கார்டுகள் கொண்டு வந்து தரப்படும்'' என்று சிவில் சப்ளைக் கார்ப்பொரேஷன் புதிய அறிவிப்பு ஒன்றை வெளியிட்டது. பல குழப்பங்களுக்குப் பின் பலரை அலையவிட்டபின் எடுத்த இந்த நல்ல முடிவை சிவில் சப்ளைஸ் கார்ப்பொரேஷன் முதலிலேயே எடுத்திருக்கக் கூடாதோ?

## துறைமுகத்தில் தேக்கம்

கோதுமையும் உரமும் கிடைக்காமல் பொதுமக்கள் திண்டாடிக் கொண்டிருக்கிறார்கள். அப்படி மக்களைத் திண்டாடவிட்டுவிட்டுக் கோதுமையும் உரமும் எங்கே ஓடி ஒளிந்து கொண்டன என்று ஆச்சரியமாயிருக்கிறதல்லவா? அவை எங்கேயும் போகவில்லை. பத்திரமாகச் சென்னைத் துறைமுகத்துக்குள்ளேயும் கப்பல்களிலும் தூங்கிக்கொண்டிருக்கின்றன.

துறைமுகத்திலிருந்து இறக்கி வைக்கக் கிடங்குகளே இல்லாத காரணத்தால் பல ஆயிரம் டன் கோதுமையும், உரங்களும் தேங்கிக் கிடக்கின்றன. பல ஆயிரம் டன் கோதுமை மூட்டைகள் துறைமுக மேடையிலேயே வைக்கப்பட்டுள்ளன. கப்பல்களிலிருந்து இறக்குவதும் வெளியே கொண்டு செல்வதும் ஆகிய வேலைகள் மிக மிகத் தாமதமாக ஆமை வேகத்தில் நடைபெறுவதாலும், போதிய கிடங்குகள் இல்லாததாலும் இந்த நிலைமை ஏற்பட்டிருக்கிறதாம்.

இதைத் தவிர எழுபத்தையாயிரம் டன் கோதுமையுடன் நான்கு கப்பல்களும் ஐந்து ஆயிரம் டன் யூரியா உரத்துடன் ஒரு கப்பலும் துறைமுகத்துக்குள் நிறுத்த இடமின்றி வெளியே கடலிலேயே காத்து நிற்கின்றனவாம். ஆயிரக்கணக்கான துறைமுகத் தொழிலாளர்களில் பெரும்பாலோர் 'கோஸ்லோ' திட்டத்தை அனுசரிப்பதுதான் இந்தக் கால தாமதத்துக்குக் காரணம் என்று தெரிகிறது.

இந்தக் கால தாமதத்தினால் கப்பல்களுக்குத் தர வேண்டிய அதிகத் தொகையையும், துறைமுகத்துக்கான 'டெமரேஜ்' தொகையையும் உணவுக் கார்ப்பொரேஷன்தான் தர வேண்டியிருக்குமாம்.

கடந்த மூன்றாண்டுக் காலத்தில் இப்படிப்பட்ட தேக்கம் ஏற்பட்டதே இல்லை என்றும் தெரிகிறது. வேறு பலவற்றில் தான் முன்னேறாமல் தேக்கமடைந்திருக்கிறோம் என்றால்


எனக்குச் சகுனத்தில்
நம்பிக்கையில்லை




மக்கள்
குமுறல்


அதிரடிக்
கார
அரசியல்
வாதி


நாம் பின்தங்குவதா?
பீகாரில் வன்முறை
உ.பி. எதிர்க்
கட்சிகள்


புதுவை
என்னய்யா, நெருக்கறே?

இதிலுமா தேக்கம் என்று கேட்கலாம்போல் இருக்கிறது. அந்நிய நாடுகள் கோதுமையைத்தான் நமக்குத் தர முடியுமே தவிர கருகருப்பையும் அக்கறையையும் தர முடியாது. அவற்றை எங்கிருந்தும் இறக்குமதி செய்ய வழியில்லை.

## சட்டசபைக்கு என்ன சம்பந்தம்?

சட்டசபை கூடுகிறதனுலும், நடக்கிற ஒவ்வொரு மணி நேரத்திலும் எவ்வளவு பொதுப் பணம் செலவாகிறது என்று பார்த்தால் அங்கு கேட்கப்படும் சில கேள்விகள் சம்பந்தமில்லாதவையும், சட்டசபையின் கண்ணியத்தை அதிகப்படுத்தாதவையுமாக இருக்குமோ என்று பொதுமக்கள் சந்தேகம் கொள்ளத் தக்கவையாக உள்ளன.

உதாரணத்துக்கு மார்ச் மாத நடுவில் சட்டசபையின் பட்ஜெட் கூட்டத் தொடரில் கேட்கப்பட்ட ஒரு துணைக் கேள்வியைப் பார்க்கலாம்.

கேள்வி: வயதான நடிகர்கள் தங்கள் வயதுக்குத் தகுந்தாற்போல் நடிக்காமல் சில வேடங்களில் நடிக்கிறர்கள். வேடத்துக்குத் தக்க வயது வரம்பு நடிகர்களுக்கு விதிக்கப் படுமா ?

இந்தத் துணைக் கேள்வியை ஓர் உறுப்பினர் கேட்டவுடனே மற்ருேர் எதிர்க்கட்சி உறுப்பினர் அவசரமாக எழுந்திருந்து ஓர் உரிமைப் பிரச்னையைக் கிளப்பி, ''எங்கள் கட்சித் தலைவரை இப்படி மறைமுகமாகத் தாக்குவது முறையா?'' என்று பதிலுக்குக் கேட்டிருக்கிறர்.

நடிப்புக்கும், வயது வரம்புக்கும், சட்டசபைக்கும் என்ன தொடர்பு என்று புரியாமல் வரிகொடுக்கும் மக்கள் திகைக்கலாம். சட்டசபை கூடுவதற்கும், ஒரு நாள் நடவடிக்கைகளை நடத்துவதற்கும் எவ்வளவு செலவாகிறது என்று பார்த்து அங்கு கேட்கப் படும் சில கேள்விகளையும் பார்த்தால்....? மக்கள் யோசிக்கவே செய்வார்கள். உறுப்பினர்கள் மக்களுக்கும், நாட்டுக்கும் பயன் படும் எத்தனையோ பிரச்னைகளை, வினக்களைச் சபையில் எழுப்பிப் பதில் பெற்ருல் அதனுல் எல்லாரும் பயனடைய முடியுமே!

## விடைபெறுகிருர் நியூ பிகின்

முப்பத்தேழு ஆண்டுகளுக்கு முன் எடின்பரோ சர்ச்சின் ஆணை ஏற்று நம் தமிழகத்துக்கு வந்த தவத்திரு டாக்டர் ஜெ. இ. லெஸ்லி நியூ பிகின் அவர்கள், அடி நாட்களில் நம் தமிழ் நாட்டுக்கு வந்த பாதிரிமார்களைப் போலவே, தமிழ் கற்று, தமிழரோடு ஒன்றித் தமிழ்ப் பணியும் மக்கட் பணியும் புரிந்து வருபவர். 1965ம் ஆண்டிலிருந்து இன்றுவரை சென்னை பிஷப்பாகவும் பணியாற்றியவர்.

தமிழ் நாட்டிலே குடிசை மாற்றுவாரியம், புதுக் குடியிருப்புக்கள் கட்டி அடிமட்ட மக்களுக்கு வசதி செய்து தர முன் வந்தது. அதன் பணி சிறக்க, திரு நியூ பிகின் அவர்கள் தம் பெயருக்குப் பொருத்தமாக ஒரு புதிய காரியத்தைத் தொடங்கினுர்கள். புது குடியிருப்போர் நல வாழ்வுக்காக ஒரு டிரஸ்ட் நிறுவினுர்கள். அது சுகாதாரம், குழந்தை வளர்ப்பு, கல்வியறிவு, வேலை வாய்ப்பு ஆகிய பல்வேறு துறைகளில் மக்களை ஊக்கி, அடிமட்டத்தை உயர் மட்டமாக்கும் பணியைச் சிறப்புறச் செய்கிறது, அதுவே ஒரு வாரியமோ என்று திகைக்கும் அளவுக்கு.

அவருக்குச் சென்னைத் திருமண்டலத்தில் உள்ள தென்னிந்தியத் திருச் சபை, குடிசை மாற்று வாரியம், அதைச் சார்ந்த புதுக் குடியிருப்போர் நல்வாழ்வு டிரஸ்ட் ஆகியவை பிரிவுபசாரம் நடத்தின.

அவ்விழாவில் அழகு தமிழில் விடையளித்த தவத்திரு நியூ பிகின், ''அறுபத்தைந்து ஆண்டுகளுக்குப் பின்னும் பணியில் ஒட்டிக் கொண்டிருக்க வேண்டுமென்று கூறுவது உகந்ததல்ல. இளந் தலைமுறையினருக்கு இடம் கொடுத்துப் பணி தொடர வாய்ப்பு அளிப்பதே பெரியவர்கள் கடமை. பொருட் செல்வத்தைக்காட்டிலும்பணிச்செல்வமேமன நிறைவு தருவது. அது தொடர நான் விடை பெறுகிறேன்!'' என்ருர். தாய்நாடு திரும்பும் திருமதி எலன் நியூ பிகினும், திரு நியூ பிகினும் எங்கு சென்ருலும் தென்னக மக்களைத் தங்கள் அன்புத் தளையால் கட்டிப் போட்டவர்கள்; அவர்களுடைய அன்புத் தளையில் கட்டுண்டவர்கள். அவர்களது அன்புப் பணி வையமெங்கும் பல்கிப் பரவிச் சிறப்பதாக.

### ராஜாஜி சிந்தனை

அன்பு என்கிற தத்துவத்தை ஆழ்ந்து ஆராய்ந்தோமானுல் அதனுடைய பலவித சக்தியைக் காண்போம். அறத்துக்கு மட்டும் அன்பு உதவும் என்பது இல்லை. போர்த் துறையிலும் அன்பு வேண்டும் என்பதைக் காண்போம். அதாவது க்ஷத்திரிய தருமத்துக்கும் அன்பு துணையாகும். அன்பு காரணமாக வீரர்கள் அரிய செயல்களைச் செய்து முடிப்பார்கள். கர்ணனுடைய சூரத்தனத்துக்குக் காரணம் அவன் துரியோதனனிடம் வைத்த அன்பு. திரௌபதியினிடம் வைத்த அன்பே பீமனுடைய வீரச் செயல்களுக்குக் காரணம். இதுவன்றிப் போர் செய்யும் முறையிலும் உண்மையான வீரர்கள் அன்பைக் காட்டுவார்கள். இதற்கும் பல உதாரணங்கள் உண்டு. தாயிடம் வைத்த அன்பினுல் கர்ணன் தன்னுடைய செயலை மாற்றிக்கொண்டதைப் பாரதப் போரில் காணலாம்.

# ஒரு நல்ல டூத்ப்ரஷ் பற்களைத் தூய்மைப் படுத்துவதில் பாதி வேலையைத்தான் செய்கிறது—



## மீதியை வீட்டா செய்து முடிக்கிறது!

வாயைத் தூய்மையானதாக வைத்திருக்க ஒரு நல்ல டூத்பேஸ்ட்டே போதும் என்பதே பொதுவான நம்பிக்கையாக இருக்கிறது. இது உண்மையல்ல. ஏனெனில் பற்களின் மஞ்சள் கறையை நீக்கி, கிருமிகளைத் தற்காலிகமாகவும், ஓரளவும் அழிப்பது மட்டுமே எந்த டூத்பேஸ்ட்டாலும் இயலும். வாயின் தூய்மைக்கு ஆதாரமான சாதனம் டூத்ப்ரஷ்தான். பல்லிடுக்குகளில் இருந்து உணவுத் துணுக்குகளை அகற்றுவதன் மூலம் கிருமிகளுக்கு எதிரான பாதுகாப்பை அளிப்பதுடன் பற்களைத் தேய்க்கும்போதே உங்கள் ஈறுகளுக்கு வலுவூட்டும் பணியைச் செய்கிறது டூத்ப்ரஷ்.

மெல்லிய அல்லது வலிய ஈறுகள் மற்றும் வலிதருகின்ற, கறைபடிந்த, இடைவெளி கொண்ட, வளைந்த அல்லது தெற்றியுள்ள பற்கள் போன்ற ஒவ்வொரு விதமான தேவைக்கும் ஏற்ப வெவ்வேறு விதமான டூத்ப்ரஷ்கள் தேவை. பல்வேறு விதமான டூத்ப்ரஷ்களை வீட்டா தயாரித்தளித்து உங்கள் வேலையை எளிதாக்கி உள்ளது. வீட்டா ப்ரஷ் ஒவ்வொன்றும் விஞ்ஞான முறைச் சோதனைகளுக்கு உட்பட்டு, 23 ஆண்டுகள் புகழ்வாய்ந்து நிற்கும் வீட்டாட்ரான் குச்சங்கள் கொண்டது.

அடுத்த முறை நீங்கள் டூத்ப்ரஷ் வாங்கும்போது, உங்கள் தேவைக்கேற்பத் தயாரான வீட்டாவையே கேட்டு வாங்குங்கள்!



சீரற்ற நார் முனைகள் ஈறுகளைச் சேதப்படுத்தி பல் எனாமலை அரித்து விடுகின்றன.



வீட்டா ஜூனியர்-இளம் வயதினருக்கென்றே தயாரானது. அளவில் மட்டுமல்லாமல் எல்லா வகையிலும் நல்லது.



வீட்டா கோல்ட்— ஈறுகளுக்கோ பல் எனாமலுக்கோ சேதம் விளைவிக்காமல், சாதாரணமாக பற்களை நன்கு துலக்கிட ஏற்றது.



வீட்டா ப்ரஷ்கள் வட்ட முனை குச்சங்கள் கொண்டவை. எனவே உங்கள் பற்களைப் பட்டின் மென்மை உணர்வில் தொட்டுத் துலக்குகின்றன.



வீட்டா காண்ட்டுசென்டல்— பற்களைப் பளபளப்பாக்கி, ஈறுகளைப் பலப்படுத்திட மிக உகந்தது.



வீட்டா டீப்-க்ளீன்— சிறிய வாய்களின் பல்லிடுக்குகள் எல்லாம் சென்று தூய்மைப் படுத்திட தனிப்படத் தயாரானது

தேவைக்கேற்றபடி வகைவகையான ப்ரஷ்கள்

**Vita®** டூத்ப்ரஷ்கள்

# ஞானாம்பிகை

'ஸ்ரீ வித்யா' என்று தேவி உபாசனையைச் சொல்கிறோம். 'வித்யா' என்றாலே ஞானம் தான். அவித்யை என்றால் அஞ்ஞானம். ஞானப் பால் தருகிற ஒரே ஒரு அம்மாவாக அம்பிகை இருக்கிறாள். இந்திராதி தேவர்களுக்கும் ஞானம் தந்தவள் அவளே என்று ஸாம வேதத்தைச் சேர்ந்த கேன உபநிஷதம் ஒரு கதை சொல்கிறது.

கதை இதுதான்: ஒரு காலத்தில் தேவாசுர யுத்தத்தில் தேவர்கள் ஜெயம் பெற்றார்கள். பரமாத்மாவின் அநுக்கிரகத்தாலேயே வெற்றி பெற்றோம்; அவர் தந்த சக்தியைக் கொண்டே யுத்தம் செய்தோம் என்பதை மறந்து, தேவர்கள் தங்களைத் தாமே மெச்சிக் கொண்டார்கள். 'இது ஏதடா, அசுரர்களை ஜயித்த இந்தத் தேவர்களுக்கே அசுர குணம் வந்து விடும் போலிருக்கிறதே' என்று பார்த்தார் பரமாத்மா. அவர்கள் அப்படிக் கெட்டுப் போகாமல் ரக்ஷிப்பதற்காக அவர்களுடைய கண்ணுக்கெட்டுகிற தூரத்தில் அடி, முடி தெரியாத ஒரு ஜோதி ஸ்வரூபமாக நின்றார்.

'இதென்ன யட்ச வடிவம் ?' என்று தேவர்கள் அதிசயித்தார்கள். நமக்குப் புரியாததை 'யட்சிணி' என்று இப்போதும் சொல்கிறோம் அல்லவா ? அம்மாதிரி தேவர்கள் அதை 'யட்சம்' என்றார்கள். அதனிடம் அக்னியை அனுப்பினார்கள். அக்னி அதை நெருங்கி ''நீ யார்?' என்று கேட்பதற்கு முன்பே அது இவனைப் பார்த்து 'நீ யார்?' என்று கேட்டது.

''நான் அக்கினியாக்கும். 'ஜாத வேதஸ்' என்கிற பெயரும் எனக்கு உண்டு'' என்றான்.

''சரி, உனக்குள்ள சக்தி என்ன?'' என்று யக்ஷம் கேட்டது.

''நான் எதையும் எரித்து பஸ்மீகரம் பண்ணி விடுவேன்'' என்றான் அக்னி.

''ஓஹோ! அப்படியானால் இதை எரி, பார்க்கலாம்'' என்று சொல்லி ஒரு துரும்பை எடுத்துப் போட்டது யட்சம்.

அக்னி தன் பூரண சக்தியையும் அந்தத் துரும்பின் மேல் பிரயோகித்தான்.

ஆனால் துரும்பு எரியவே யில்லை.

அக்னி வெட்கமடைந்து தேவர்களிடம் திரும்பி வந்து நடந்ததைச் சொன்னான்.

அதன்மேல் அவர்கள் வாயுவை யட்சத்திடம் அனுப்பினார்கள்.

முன்போலவே, ''நீ யார்?'' என்று கேட்டது யட்சம்.

''நான் வாயு. 'மாதரிச்வன்' என்றும் பெயர் பெற்றவன். எதையும் புரட்டித் தூக்கிக் கொண்டு போகும் சக்தி வாய்ந்தவன்'' என்றான் வாயு.

''சரி, இந்தச் சின்னத் துரும்பைத் தூக்கிப் பார்'' என்றது யக்ஷம்.

வாயு பிரம்மப் பிரயத்தனம் செய்தும், அவனால் துரும்பை அசைக்கவும் முடியவில்லை.

வாயு திரும்பி வந்தான் — ''நீ யார்?'' என்று யட்சத்தைக் கேட்பதற்கே வாயில்லாதவனாக.

''நாம் அசுரரிடம் அடைந்த ஜயத்தைக் கொண்டாடும் வெற்றி விழாவை இப்படி இது அபஜயமாக்கி விட்டதே'' என்று தேவர்கள் யோசித்தார்கள். இப்போது தேவராஜனுக்கே ஓர் அடக்கம் உண்டாகி விட்டது. தங்களைவிடப் பெரியதொரு சக்தி இருக்கிறது என்கிற அறிவு உண்டாயிற்று. அகம்பாவம் போய் ஒரு க்ஷணம் ஈசுவர பக்திகூட உண்டாகி விட்டது.

நாம் ஏதோ சாதித்து விட்டதாக நினைத்து அவ்வப்போது வெற்றி விழாக் கொண்டாடுகிறோம். இப்போது நம் தேசத்தில் இது ரொம்ப ஜாஸ்தி. கொஞ்ச நாள் கழித்துப் பார்த்தால் அந்த வெற்றி எங்கே போச்சு என்று தெரியவே யில்லை. வேறு யாரோ வெற்றி விழாக் கொண்டாடுகிறார்கள். அப்புறம் அவர்கள் கதையும் மாறிப் போகிறது. மாறாத ஜயம் ஆத்ம ஜயம்தான். அந்த ஜயமும் சரி, மற்ற லௌகிக வெற்றிகளும் சரி, பரதேவதையின் கிருபையாலேயே கிடைப்பவை. இதைப் புரிந்து கொண்டு, தேவதைகளுக்கெல்லாம் சக்கரவர்த்தியாக இருக்கப்பட்ட இந்திரன் யட்சத்தை நெருங்கினவுடன் மகா காருண்யம் பொருந்திய அது இவனுக்கு ஞான அநுக்கிரகம் செய்வதற்காக திவ்விய ஸ்திரீ ரூபத்தில் நின்றது. 'அந்த ஆகாசத்திலேயே மகத்தான சோபை பொருந்திய ஹைமவதியான உமாதேவி தோன்றினாள்' என்கிறது உபநிஷத்து.

உருக்கிய பொன்னைப் போன்ற பிரகாசத்தோடு, அதாவது ஞான ஒளியாக வந்து நின்ற அம்பாளை இந்திரன் நமஸ்கரித்தான். ''சற்று முன் இங்கு தோன்றிய யட்ச வடிவம் என்ன?'' என்று கேட்டான்.

சாட்சாத் அம்பிகை அவனுக்கு ஆசாரிய ஸ்தானம் வகித்து ஞானோபதேசம் செய்தாள். ' அப்பா, பிரம்மம்தான் அந்த யட்ச வடிவம்' இவ்வளவு பிரபஞ்சத்துக்கும், உனக்கும், சகல தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் காரணமாக, ஆதாரமாக இருப்பது அது ஒன்றுதான். அதன் அகண்டமான சக்திதான் எல்லா ஜீவராசிகளிடமும் கண்டம் கண்டமாக, துளித் துளி இருக்கிறது' என்று உபதேசித்தாள்.

முதலில் யட்ச வடிவாக நின்று தேவர்களை அவமானப்படுத்தினாள். அவமானப்படுத்தியது அகம்பாவத்தை அடக்குவதற்கே. அகம்பாவம் அடங்கினவுடன் பரமாநுக்கிரஹமான ஞானோபதேசம் தந்தாள். தேவராஜன் உண்மையை இதுவெனத் ' (இதம்) தெரிந்து கொண்டதாலேயே (த்ர:) அவனுக்கு 'இந்திரன்' என்று பேர் உண்டாயிற்று. மற்ற தேவர்கள் பிரம்ம ஸ்வரூபத்தைப் பார்த்ததோடு சரி. இவன்தான் அதன் கருணை மூர்த்தமான அம்பாளைத் தரிசனம் செய்து அவளிடமிருந்து பிரம்ம ஸ்வரூபத்தையும் தெரிந்து கொண்டு வந்தவன்.

இந்த உபநிஷத்துக்கு ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர்களின் பாஷ்யத்தில் 'மிகவும் சோபை பொருந்தியவள்' என்பதற்கு அர்த்தம் செய்கிறபோது, 'சோபை உள்ளவற்றுக்கெல்லாம் மேலான உத்கிருஷ்டமான சோபை ஞானம்தான் — வித்யைதான். அந்த வித்யா





ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி
காமகோடி சங்கராசார்ய
ஸ்வாமிகள்

ரூபிணியே உமா. ஹைமவதியாகி ஹேம (பொன்) ஆபரணங்களை அணிந்தும் இந்தச் சோபையை வெளிப்படக் காட்டுகிறாள். எல்லாவற்றையும் அறிகிற அறிவான ஸர்வக்ஞ தத்துவமே பரமேச்வரன். அந்த அறிவோடு இரண்டறச் சேர்ந்திருக்கிற ஞான ஸ்வரூபிணியே இவள்' என்கிறார்.

அறிகிறவன், அறியப்படுகிற பொருள், அறிவு எல்லாமே தானாக ஆகிய ஏக வஸ்துவான பிரம்மத்தின் சக்தி அவள். 'சித்தமிசை குடிகொண்ட **அறிவான** தெய்வமே' என்று இந்த ஞான ஸ்வரூபத்தைத்தான் தாயுமான ஸ்வாமிகள் சொல்கிறார்.

நான் காளஹஸ்திக்குப் போயிருந்தபோது கிரிப் பிரதட்சணம் செய்தேன். வழியில் ஒரு மலைமேலேறி அங்கு ஒரு வனத்திலுள்ள சிவலிங்கத்தைத் தரிசனம் செய்து கொண்டேன். அந்த லிங்கம், 'ஸஹஸ்ர லிங்கம்'— அதாவது லிங்காகாரமான ஒரே சிலைக்குள் சின்னச் சின்னதாக ஆயிரம் லிங்கங்கள் வடித்திருக்கும். அந்த ஸஹஸ்ர லிங்க ஆலயத்தில் 'யட்ச லிங்கம்' என்று ஒன்றைச் சொல்கிறார்கள். 'இந்திர லிங்கம்' என்றும் ஒன்று இருக்கிறது. காளஹஸ்திப் பெரிய கோவிலில் இருக்கிற அம்பாளின் பெயரோ ஞானாம்பிகை; அல்லது ஞானப் பிரஸூனாம்பிகை. இதை யெல்லாம் சேர்த்துப் பார்த்தால், கேன உபநிஷத்தில் சொல்லியிருக்கிற சம்பவம் — யட்சம் தோன்றினதும், பிறகு அம்பாள் ஆவிர்பவித்து இந்திரனுக்கு ஞானோபதேசம் செய்ததும் — இந்தக் காளஹஸ்தியில் தான் நடந்திருக்க வேண்டும்.

அம்பாளை ஆராதிக்க நாமாகப் புது மார்க்கம் கண்டுபிடிக்க வேண்டியதில்லை. பெரிய ரிஷிகளும் மகாத்மாக்களும் அவளை ஆராதித்த இடங்கள் இன்று மகா க்ஷேத்திரங்களாக விளங்குகின்றன. அங்கே போய் நமஸ்கரித்துத் தியானம் செய்தால் போதும். அவளுடைய கடாக்ஷம் கிட்டிவிடும்.

புஷ்பமும் சுகந்தமும் போல், பாலும் சுவையும் போல், அக்கினியும் பிரகாசமும் போல், அவள் பரமேச்வரனோடு பிரிக்க முடியாத சக்தி. இதே மாதிரி ஸ்ரீமந் நாராயணனோடும் பிரிக்க முடியாமல் சகோதரி பாவத்தில் இருக்கிறாள். அவள் துர்க்கையாக வந்து அசுரர்களை வதைத்தபோது வைஷ்ணவியாக இருக்கிறாள். ஸ்ரீ கிருஷ்ண ஜயந்தியின் போதே யசோதையின் கர்ப்பத்திலிருந்து விஷ்ணு மாயையாக அவள் அவதரித்தாள். துர்க்கையை சரத்கால நவராத்திரியில் பூஜிக்கிறோம். கெட்டதை வதைத்தாள் அவள். இந்த சம்ஹாரத்துக்குப் பின் நல்லதை வளர்க்க வேண்டும். ஞானத்தை வளர்க்க வேண்டும். ஞானோபதேசம் செய்ய அம்பாள் ஆவிர்ப்பவித்ததையே வஸந்த காலத்தில் ஒரு நவராத்திரியாகக் கொண்டாடுகிறோம்.* கிருஷ்ணனோடு துர்க்கை தோன்றின மாதிரி ஸ்ரீ ராம நவமியின்போது 'ஞானாம்பிகை' தோன்றினாள்.

உமா என்பது பிரணவ ஸ்வரூபம் என்று முன்பே சொன்னேன். நாதமே அவளுக்கு சரீரம் மாதிரி. நம் சரீரம் எத்தனை அழகாக இருக்கிறது என்று நாம் அகம்பாவப்பட்டுக் கொண்டாலும், துளிமேலே கிழிவிட்டால்கூட, உள்ளே பார்க்கச் சகிக்காமல் இருக்கிறது. எத்தனையோ கழிவடைகளை உள்ளே அடைத்து வைத்திருக்கிறோம். இதற்குள் எங்கே என்று சொல்லத் தெரியாமல் அறிவு என்கிற ஒரு மணி இருக்கிறது. அவளுடைய சரீரமோ நாத மயம், சப்த மயம், வாக் மயம் — ஐம்பத்தோர் அட்சரங்களுமே அவளுக்குச் சரீரமாக இருக்கிறது. அதில் முழுக்க முழுக்க அறிவே வியாபித்திருக்கிறது. அந்த அறிவைத்தான் ஞானாம்பிகை என்பது.

மாறிக்கொண்டும் அழிந்து கொண்டும் இருப்பவைகளைச் சத்தியமென்று நினைக்காமல், மாறாமல் சாசுவதமாக உள்ள ஒரே வஸ்துவை — அதற்கு வேறாக நான் என்று தனியாக ஒன்று இல்லை — என்கிற அநுபவத்தில் தெரிந்து கொள்வதுதான் உண்மையான அறிவு. இந்த அறிவைத் தருகிற பராசக்தி ஞானாம்பிகையாகி திவ்ய மங்கள ஸ்வரூபிணியாக விளங்குகிறாள். அவளை எந்நாளும் தியானம் செய்து அநுக்கிரகம் பெறுவோம்.

---

**ஸ்ரீ ஞானாம்பிகையின் அருள் பொலிகிற ஸ்ரீ காளஹஸ்தி ஆலயத்தின் மகா கும்பாபிஷேகம் வஸந்த நவராத்திரியின் நிறைவு நாளும், ஸ்ரீ ராம நவமியுமான ஏப்ரல் முதல் தேதி அதிவிமரிசையாக நடக்கிறது. யாவரும் உடல், பொருள், ஆவியால் கலந்துகொண்டு ஞானப் பிரசாதம் பெற வேணும்.**

---

* இவ்வாண்டு 'வஸந்த நவராத்திரி' மார்ச் 24-லிருந்து ஏப்ரல் 1 வரை நிகழ்கிறது.

# செல்வத்தின் பொருளுணர்ந்த சீலர்

அண்ணல் காந்தியடிகளைத் திரு ஜி.டி. பிர்லா சந்தித்த அன்றையத் தினமே இருவரிடையேயும் அபரிமிதமான அன்பு பெருகியதில் ஒரு பொருத்தம் இருக்கிறது. நாள் தவறாமல், "ரகுபதி ராகவ ராஜாராம்! பதித பாவன சீதாராம்!" என்று பாடித் துதித்த காந்தியடிகள், ஸ்ரீ ராமர் அவதரித்த ஸ்ரீராமநவமி தினத்தன்றே பிறந்த திருஜி.டி. பிர்லாவிடம் அளப்பரிய பாசம் வைத்தார். அந்த முதல் சந்திப்பிலேயே பிர்லா அவர்களும் காந்திஜியின் அருமை பெருமைகளை முழுமையாக உணர்ந்து பரம பக்தரானார்.

அந்தச் சந்திப்பின்போது திரு பிர்லா, பிரிட்டிஷ் அரசின் அதிருப்தியைச் சம்பாதித்துக் கொண்டாலும் பாதகமில்லை என்று கருதும் அளவுக்குப் பெரிய தொழில் — வர்த்தகப் பிரமுகராக இருக்கவில்லை. சுதந்திர இயக்கத்துக்குப் பெருந் தொகைகளை உதவக் கூடிய அளவுக்கு அவர் குடும்பம் செல்வச் சிறப்பு பெற்றிருக்கவும் இல்லை. இருந்தாலும் அளப்பரிய தைரியத்துடன் அவர் அண்ணலின் கோரிக்கைகளையெல்லாம் பூர்த்தி செய்தார்.



இரவு உணவுக்குப் பிறகு மகன், மருமகள் பேத்தி ஆகியோருடன் திரு ஜி. டி. பிர்லா

சுதந்திரப் போராட்டத்துக்கு மட்டுமின்றி அதன் தொடர்பாக அண்ணல் மேற்கொண்ட நிர்மாணப் பணிகள் பலவற்றுக்கும்கூட ஏராளமான பொருளுதவிகளைத் தொடர்ந்து செய்து வந்தார்.

'சுதந்திர இயக்கத்துக்கு உதவ வேண்டும் என்பதற்காகவே இவர் முழு மூச்சுடன் தொழில் வர்த்தகத் துறையில் ஈடுபட்டுத் தமது ஆற்றலையெல்லாம் காட்டி நிரம்பப் பணம் சம்பாதிக்கிறாரோ' என்றுகூட எண்ணுமளவுக்கு இவரது அறப் பணி சிறந்தது. பண உதவியுடன் மட்டுமின்றி பம்பாய், தில்லி, கல்கத்தா ஆகிய நகரங்களில் சுதந்திர இயக்கத் தலைவர்கள் தங்கவும் ஆலோசனைகள் நடத்தவும் வசதி செய்து தந்தார். அத்துடன் மகாத்மாவின் திட்டங்களில் அவர் எந்த அளவுக்கு விரும்பி அனுமதி அளித்தாரோ, அந்த அளவுக்கு நேரடியாகப் பங்கு பற்றவும் செய்தார்.

இந்த ஸ்ரீராமநவமி புண்ணிய தினத்தில் எண்பதாண்டுகள் நிரம்பப்பெறும் திரு ஜி.டி. பிர்லாவின் சிந்தனையெல்லாம் நமது நாட்டில் ஏற்பட வேண்டிய விஞ்ஞான வளர்ச்சி, தொழில் வளர்ச்சி பற்றியதுதான். இதற்காக இளம் வயதிலிருந்தே அவர் சம்பிரதாய முறைகளை விட்டொழித்து நவீன முறைகளைப் பின்பற்றத் தமது மனத்தைப் பக்குவப்படுத்திக் கொண்டார். ஆனால் அதே சமயம் நமது தொன்மையான சம்பிரதாயங்களில் உள்ள நல்ல அம்சங்களை விட்டுவிடக் கூடாது என்பதிலும் கவனமாயிருந்தார். தொழில் துறையிலும் விவசாயத் துறையிலும் மாத்திரம் முன்னேற்றம் ஏற்பட்டாலொழிய சுதந்திரம் என்பது பெயரளவில்தான் இருக்குமே ஒழிய மக்களுக்கு அது பயன் தருவதாயிராது என்பதை நாடு சுதந்திரம் அடைவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பாகவே உணர்ந்து செயல்படத் தொடங்கி இன்றும் அந்த நோக்கத்துடனேயே உழைத்து வருகிறார் திரு ஜி. டி. பிர்லா.

பன்னிரண்டாவது வயதில் குடும்பத்தின் வர்த்தக நிறுவனத்தில் சேர்ந்து வேலை பார்க்கத் தொடங்கியவர், தமது இருபத்தைந்தாவது வயதில் சொந்தமாக ஒரு தொழிலகத்தை ஆரம்பித்து விட்டார். அன்று தொடங்கி இன்று வரை அவரது தொழிலகங்கள் பல்கிப் பெருகி ஈடுஇணையற்ற ஒரு சாம்ராஜ்யமாக விரிந்திருக்கின்றன. பருத்தித் துணி, சணல், விஸ்கோஸ் ரேயான் மற்றும் கம்பளி, லினன், பருத்தி நூல், ரேயான், நெசவாலை இயந்திரங்கள், சிமெண்ட், சர்க்கரை, சர்க்கரை ஆலை இயந்திரங்கள், வனஸ்பதி, காகிதம், மின்சார மோட்டார்கள், மின் விசிறிகள், சைக்கிள்கள், மோட்டார் கார்கள், பால் பேரிங்குகள், ரசாயனப் பொருள்கள், பலரக உலோகங்கள், ரேடியோக்கள், பிளாஸ்டிக் பொருள்கள் என்று இவரது பல்வேறு தொழிலகங்கள் இந்திய மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்யச் செய்து குவிக்கும் அம்சங்களுக்குக் கணக்கேயில்லை. நாட்டின் தொழில், பொருளாதார வளர்ச்சி ஆகியவற்றில் திரு பிர்லாவின் பங்கு மகத்தானது.

தொழில் வர்த்தகத் துறையில் சிறப்பெய்தியது மட்டுமின்றி ஒரு வங்கியையும் தொடங்கிப் புகழ் பெற்றார். யுனைடெட் கமர்ஷியல் பாங்க் நாட்டின் மிகப் பெரிய ஐந்து பாங்குகளில் ஒன்று என்பதோடு மிகவும்



அதிகாலை நேரத்தில் அலுவல்கள் ஆரம்பமாகி விட்டன.

முற்போக்கான திட்டங்களை வகுத்துக் கொண்டு செயலாற்றுவதாகும். ரூபி ஜெனரல், ஏஷியாடிக் ஆகிய இரு இன்ஷியூரன்ஸ் நிறுவனங்களையும் ஆரம்பித்துப் பாலிஸிதாரர்களின் பாராட்டுக்களுக்கு உரியவரானார்.

தமது எண்பதாவது வயதில் இன்றைக்கும் இந்தியாவுக்குப் புதியதான ஒரு துறையில் தொழிலகத்தை ஆரம்பிக்க வேண்டுமானால் அந்தச் சவாலை ஏற்கத் திரு ஜி. டி. பிர்லா தயார்தான். ஆனால் நமது அரசின் பொருளாதாரக் கொள்கை இதற்கு 'இசைவு தருமா என்பதுதான் சந்தேகம்.

இந்தியத் தொழிலதிபர்கள் ஒருமித்துத் தங்கள் பிரதிநிதி என்று கருதும் அளவுக்குச் சிறப்பும் புகழும் மதிப்பும் பெற்றுள்ள பிர்லாஜி, தலையாயத் தொழிலதிபராக மட்டுமின்றித் தலைசிறந்த கொடையாளியாகவும் விளங்குகிறார். சர் சி. வி. ராமன் ஒரு முறை அவருக்குக் கடிதம் எழுதினார்: ''ரூ. 22,000 பெறுமானமுள்ள ஒரு விஞ்ஞானக் கருவியை நான் அயல்நாட்டிலிருந்து தருவிக்கவேண்டியிருக்கிறது. அந்த உபகரணம் கிடைத்தால் என் ஆராய்ச்சி பூர்த்தி அடையும். நான் நோபல் பரிசு பெறுவது நிச்சயம் !''

எவ்வளவு தன்னம்பிக்கை அந்த மேதைக்கு! அதோடு, 'பணம் உதவுங்கள்' என்று கேட்க முடியாத அளவுக்குச் சுய கௌரவம்! நிலைமையை விளக்கியதோடு நிறுத்திக் கொண்டார். ஒரு கனவானுக்கு ஏற்ற மற்றொரு கனவானாக நடந்து கொண்டார் திரு பிர்லா. சற்றும் தாமதியாமல் தமது வாழ்த்துக்களுடன் ரூ. 22,000த்துக்கு ஒரு காசோலை அனுப்பி வைத்தார்! அவர் அனுப்பி வைத்த நல்ல வேளை, சர் சி. வி. ராமனுக்கு நோபல் பரிசும் கிடைத்துவிட்டது. சர் சி.வி. ராமன் தமது கடைசிக் காலம் வரையில் திரு பிர்லாவின் இந்தப் பெருந்தன்மையை மறக்கவேயில்லை.

பிர்லாவின் கொடையுள்ளத்தைக் கொண்டாடுகிற நிறுவனங்கள் எத்தனையோ என்றாலும் குறிப்பாக அவர் அகில இந்திய ஹரிஜன சேவா சங்கத்தின் தலைவராக இருந்து நாடு முழுவதும் ஹரிஜனப் பணியாற்றும் நிறுவனங்களுக்கு லட்சம் லட்சமாக வாரிக் கொடுத்ததைச் சொல்ல வேண்டும். தக்கர் பாபா வித்தியாலயத்துக்குத் தாராளமாகத் தயங்காமல் உதவியுள்ளார். அமெரிக்காவில் பாஸ்டனுக்குச் சென்றிருந்த போது அவர் இதயத்தைக் கவர்ந்த ''மாஸசூ ஸெட்ஸ் இன்ஸ்டிடியூட் ஆஃப் டெக்னலஜி'' என்ற மாபெரும் பொறி இயல் கல்லூரியின் பாணியில் பிலானியில் ''பிர்லா இன்ஸ்டிடியூட் ஆஃப் ஸயன்ஸ் அண்டு டெக்னலஜி'' உருவாயிற்று. இதனைத் தொடங்கப் பத்து கோடி ரூபாய்க்கும் அதிகமாக வழங்கினார் வள்ளல் ! தொடர்ந்து வருடா வருடம் சுமார் ஒன்றே கால் கோடி ரூபாய் வரையில் இதனை நடத்தி வருவதற்கான செலவுகளை இவரது குடும்பம் ஏற்கிறது !

திரு பிர்லாவின் அன்றாடப் பழக்க வழக்கங்களைக் கவனித்தால் அவரது குண இயல்புகளை மட்டுமின்றி அவரது வெற்றிக்கான ரகசியங்களையும் ஓரளவுக்குப் புரிந்து கொள்ளலாம்.

இந்த வயோதிக வயதிலும் அவர் அதிகாலையில் ஐந்து மணிக்கு முன்னதாகவே எழுந்துவிடுகிறார். ஆக்கபூர்வமான பணிகளுக்கு ஆரோக்கியமான வாழ்வு முக்கியம் என்பதை அறிந்தவராதலின் ஒரு மணி நேரம் விடுவிடுவென்று நடக்கிறார். பிறகு நாளிதழ்களை மேம்போக்காக அல்ல, உன்னிப்பாகவே படிக்கிறார். குளித்து முடித்து வரும்போது, 'இந்தியத் தொழிலதிபர்களுக்குள்ளே மிக நேர்த்தியாக உடை அணிபவர்' என்ற நல்ல பெயருக்கு மாசு ஏற்படாது பார்த்துக் கொள்கிறார். காலை உணவு முடிந்ததும் அவரது அன்றாட அலுவல்கள் ஆரம்பமாகின்றன. இந்தியாவின் எந்த நகரத்தில் அவர் இருந்தாலும் சரி, தமது பல்வேறு தொழிலக நிர்வாகிகளுடன் டெலிஃபோன் மூலம் தொடர்பு கொண்டு பிரச்னைகளை அறிந்து யோசனைகள் கூறி உதவுகிறார். தபாலில் ஒவ்வொரு தொழிலகத்தின் உற்பத்தித் திறன் பற்றியும் புள்ளி விவரங்களுடன் தக

மிக உன்னிப்பாய் ஆராய வேண்டிய விஷயத்தில் கருத்துச் செலுத்துகிறார் பிர்லா. அவரது வலக் கரம் என்று கருதப்படும் திரு டி. பி. மண்டேலியா தாள்களைத் திரு பிர்லாவுக்குக் காட்டுகிறார்.






வல்கள் வந்து சேர்கின்றன. இவற்றைப் படிக்கும் போதே, ''டெலக்ஸ்'' மூலம் உத்தரவுகளைப் பிறப்பிக்கிறார். அவரைச் சில நிமிஷங்கள் கவனித்தோமானால் நேரத்தை எப்படிப் பொன்னாக மதிக்கிறார் என்பது தெரிய வரும். ''எந்த ஒரு தொழிலகத்தின் நிர்வாகத்திலும் கால விரயமின்மை என்பதுதான் வெற்றிக்கு முக்கிய அடிப்படை'' என்பார் திரு பிர்லா. ''இதில் சிரத்தை காட்டவில்லையானால் அது அந்தத் தொழிலகத்தின் நஷ்டம் மட்டுமல்ல, நாட்டுக்கே நஷ்டம்'' என எடுத்துரைப்பார். ''நாட்டின் முன்னேற்றமும் செல்வச் செழிப்பும் உற்பத்தித் திறன் என்ற மந்திரச் சொல்லிலேதான் அடங்கியிருக்கிறது'' என்பார்.

தம்மைக் காண வருகிறவர்களுடன் சரளமாக எளிமையாகப் பேசுவார். ஆனால் வந்தவர் சளசளவென்று வம்பு வளர்த்து நேரத்தை வீணடித்தாலோ பிர்லா மௌனத்தில் ஆழ்ந்து போவார். அது, பார்க்க வந்தவர் விடைபெறலாம் என்பதை உணர்த்துவதாய் அமையும்!

பிர்லா அவர்கள் பகல் போதில் அதிகமாய் உண்பதில்லை; உறங்குவதுமில்லை. பகல் தூக்கம், இரவு நேர ஆழ்ந்த நித்திரையைப் பாழாக்கும் என்பார். மாலையில் குளித்த பின்னர், பட்டு ஜிப்பாவும் பஞ்சகச்சம் வைத்து வேஷ்டியும் அணிவார். இரவு போஜனம்தான் சற்றுப் பலமாய் இருக்கும். அப்போது காய்கறிகளை அதிகம் சேர்த்துக் கொள்வார். அவருக்கு நன்றாகச் சமைக்கவும் தெரியும்! அயல்நாடுகளுக்குச் செல்ல நேர்கையில் தமக்கு ஏற்ற இரவு நேர உணவைத் தாமே தயாரித்துக் கொள்வார்.

திரு பிர்லாவிடம் அருமையான நூலகம் உண்டு. பகவத் கீதை, உபநிஷதங்கள் பற்றி அறிஞர்கள் எழுதியுள்ள விளக்க, உரைகளை அடிக்கடி படிப்பார்.

மாலை நேரத்தில் குடும்பத்தினருடன் அமர்ந்து உற்சாகமாய்ப் பேசுவார் பிர்லாஜி. பஜன்கள் பாடச் சொல்லிக் கேட்பார். சில சமயம் அவரேகூடப் பாடுவார்! பிர்லாவுக்கு இசை நுணுக்கங்கள் நன்றாகத் தெரியும். இரவு ஒன்பது மணிக்கு மேல் அவர் விழித்திருப்பதேயில்லை.

தமது முப்பத்திரண்டாம் வயதிலேயே மனைவியை இழந்துவிட்ட திரு பிர்லா அதன் பின்னர் மறுமணம் செய்து கொள்ளவேயில்லை. ''எனக்கு மனைவியாக வாய்த்தவள் ஓர் அற்புத வியக்தி. அவள் மறைவை நான் நாட்டின் நலனை முழு மனத்துடன் கவனிப்பதன் மூலம்தான் ஈடுசெய்ய முடியும்'' என்கிறார் பிர்லா.

திரு பிர்லா ஓர் எழுத்தாளரும்கூட! ஹிந்தியிலும் ஆங்கிலத்திலும் பல நூல்கள் எழுதியுள்ளார். ''ரூபாயின் கதை'' என்ற தலைப்பில் ஹிந்தியில் வெளியாகியுள்ள புத்தகம், பாமர மக்களுக்குப் பொருளாதார அடிப்படைகளை விளக்குவதாக உள்ளது. ''மகாத்மாவின் நிழலில்....'' என்ற ஆங்கில நூலில் நெஞ்சைத் தொடும் விதமாகத் தமது வாழ்க்கை அனுபவங்கள் சிலவற்றை விவரித்துள்ளார். தமது அறுபதாவது வயதில் பிரெஞ்சு மொழி பயில ஆரம்பித்து இன்று அதில் நல்ல தேர்ச்சி பெற்று விளங்குகிறார் இந்த அதிசய மனிதர்!

திரு பிர்லா அவர்களின் மகத்தான வெற்றிகளுக்கு மற்றொரு காரணம் அவர் ஒரு தீர்க்கதரிசி — தேர்ந்த சிந்தனையாளர் என்பது. நாடு சுதந்திரம் பெறுமுன்னரே, 1944ம் ஆண்டிலேயே — ஐந்தாண்டுத் திட்டங்கள் பற்றி யாருமே நினைத்துக்கூடப் பார்க்காத போது — அவர் நாட்டின் பிரதானமான தொழிலதிபர்களை ஒன்றுகூட்டி இந்தியாவின் பொருளாதார வளர்ச்சிக்குச் சிறப்பான ஒரு திட்டம் தீட்டி அளித்தார். ''பம்பாய்த் திட்டம்'' என அது பிரபலமடைந்தது. அவரது சாதனைகள் யாரையுமே மலைக்கச் செய்யும் அளவுக்கு மகத்தானவை என்றாலும், ''எனது சிந்தனையில் உருவாகியுள்ள திட்டங்களுடன் ஒப்புநோக்குகையில் எனது சாதனைகள் மிகக் குறைவு'' என்பார்.

இப்பேர்ப்பட்ட ஒரு தேர்ந்த சிந்தனையாளரை, செயல் வீரரை, நிர்வாக ஆற்றல் உள்ளவரை, அன்பும் பண்பும் மிக்க பெருந்தகையைப் பாரத அரசு ஏன் இன்னும் சிறந்த முறையில் நாட்டு நலனுக்காகப் பயன்படுத்திக் கொண்டிருக்கக் கூடாது என்ற கேள்வி எழுவது இயல்பு. இவர் மட்டுமா? அனுசிதமான அரசியல் நோக்கினால் இவரைப் போன்ற பல அறிஞர் பெருமக்களின் ஆற்றல் நமது நாட்டுக்குக் கிட்டாமல் போய்விட்டிருக்கிறது என்பதைச் சரித்திரம் விசனத்துடன் குறிப்பிடத்தான் செய்யும்.

நாட்டு நலனையே உயிர் மூச்சாகக் கொண்டிருக்கும் திரு கனஷியாம் தாஸ் பிர்லா அவர்களின் படத்தை இவ்விதம் மேலட்டையில் வெளியிடுவதில் பெருமிதம் அடைகிறோம். அவரது எண்பதாவது பிறந்த நாளில், நூறாண்டு காலம் வரையிலும் அதற்குப் பின்னரும்கூட நற்பணிகளைத் தொடருமாறு வாழ்த்துகிறோம்.

மேலட்டை: வண்ணப்படம்:

**கே. எஸ். ராமானுஜம்**

## அருள்மிகு மீனுட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில், மதுரை

### புஷ்பக் கட்டளை ஏற்படுத்துவது சம்பந்தம்

மதுரை அருள்மிகு மீனுட்சி சுந்தரேசுவரர் ஆலயத்திலும், திருப்பரங்குன்றம் அருள்மிகு ஆண்டவர் சுப்பிரமணிய சுவாமி ஆலயத்திலும் எல்லா மூர்த்திகளுக்கும் மாலை புஷ்பம் சாத்துப்படி செய்ய மதுரைக் கோயிலுக்கு ரூ. 1200/-ம், திருப்பரங்குன்றம், அருள்மிகு ஆண்டவர் சுப்பிரமணிய சுவாமி ஆலயத்திற்கு ரூ. 1000/-ம் மேற்படி திருக்கோயில் மூலம் தனித்தனியே முதலீடு செய்தால் அதிலிருந்து கிடைக்கக்கூடிய வருட வட்டி வருமானத்திலிருந்து, உபயதார்கள் விரும்பும் நட்சத்திரத்தன்று, வருடத்திற்கு ஒரு நாள் எல்லா சுவாமிகளுக்கும் புஷ்பம் சாத்துப்படி செய்து சுவாமி அம்பாளுக்கு அர்ச்சனை செய்து பரம்பரை பரம்பரையாகக் கட்டளைதாருக்கு பிரசாதம் அனுப்பி வைக்கப்படும்.

ஆகையால் அன்பர்கள் தங்கள் பெயரில் புஷ்பக் கட்டளைகள் ஏற்படுத்தி இறைவன் திருவருளுக்குப் பாத்திரராகும்படிக் கேட்டுக் கொள்கிறேம்.

மதுரை
7–3–74

என். எஸ். இராமச்சந்திரன், பி.ஏ., பி.எல்.,
நிர்வாக அதிகாரி/உதவி ஆணையர்

---

சர்வதேச தேவைக்கான இணைப்பு ரயில் பெட்டிகள்




உலகின் பெரிய ரயில் பெட்டித் தொழிற்சாலைகளில் ஒன்றான பெரம்பூர் ICF தொழிற்சாலை ஆண்டுதோறும் 700க்கும் மேற்பட்ட பல ரக ரயில் பெட்டிகளைத் தயாரித்து வருகின்றது.

கடந்த 18 வருடங்களாக ICF தயார் செய்த ரயில் பெட்டிகள் நம் நாட்டு ரயில் பாதைகளில் ஓடிக்கொண்டிருக்கின்றன.

இப்பொழுது ICF ரயில் பெட்டிகள் அயல்நாடுகளுக்கும் ஏற்றுமதியாகி யுள்ளன. தாய்லாந்துக்கு 45 போகிகளும், தாய்வானுக்கு 100 போகிகளும், மேலும் தாய்வானுக்கு 113 பிரயாணி ரயில் பெட்டிகளும் ஏற்றுமதியாகி யுள்ளன. சில மாதங்களுக்கு முன் ஜாம்பியா தேசத்திற்கு 6 ரயில் பெட்டிகள் ஏற்றுமதி செய்யப்பட்டன. இப்பொழுது பிலிப்பைன்ஸ் தேசத்திற்கு 30 ரயில் பெட்டிகள் செய்யப்பட்டு வருகின்றன.

**இணைப்புப் பெட்டி தொழிற்சாலை**
(இந்திய ரயில்வே நிர்வாகத்தின் ஓர் பிரிவு)
மதராஸ் - 38 (இந்தியா)

# வருகுது ஒரு புதிய மென்மை உங்கள் துணிகளுக்கு:
# புதிய லக்ஸ் பவுடர்




துணிகளுக்கு மென்மை-
யூட்டும் விசேஷப் பொருள்கள்
உள்ளன புதிய லக்ஸ் பவுடரிலே.
மதிப்பரிய ஆடைகளை அவை
புதுக் கருக்கான மென்மையோடு
பேணுகின்றன... சலவைக்கு சலவை.
மென்மயம் கொஞ்சும் லக்ஸ்
சலவையிலே...பட்டாடைகளுக்குப்
பூப்போன்ற மெல்லிழைவு*...இராக் கால
உடைகள், ப்ரா, அனைத்துக்குமே அரவணைப்பான பராமரிப்பு...விலையுயர்ந்த
காருக்கான ஆடைச் செல்வங்கள் சட்டைகளுக்கும், சிந்தெடிக் துணிகளுக்கும்
அதி உன்னதமான பொலிவு. சலவைக்குரியது லக்ஸ்...மென்மை தவழும் பவுடர்.

சென்னையிலும் பெங்களூரிலும்
மட்டுமே கிட்டும்.



* இந்தியாவிலே, சர்வதேசக்
கம்பளிச் செயலகத்தின்
நற்சான்றுகிய வுல்மார்க் முத்திரை
பெற்ற ஒரே ஒரு சலவைப்
பவுடர் லக்ஸ்.

## நேர்த்தியான துணிகளைப் புதுக் கருக்கான
## மென்மையோடு வைத்திருப்பது புதிய லக்ஸ் பவுடர்

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-LXP-3-140 TH

# இசைக் கல்லூரிக்கு இருபத்தைந்து



தென்னகத்தின் தனிப் பெரும் சொத்து என்ன எனில் கர்நாடக சங்கீதம் என்று தயங்காமல் கூறலாம். என்றுமுள இந்த இசையை வருங்காலத்துக்குத் தூய்மையுடன் காத்துத் தருகிற முக்கியமான நிறுவனங்களில் ஒன்று சென்னை அடையாற்றில் உள்ள கர்நாடக சங்கீதக் கல்லூரி. 1949ல் திரு தி. சு. அவிநாசிலிங்கம் செட்டியார் அவர்கள் ராஜ்யக் கல்வி அமைச்சராக இருந்தபோது, சுதந்திர பாரதத்தில் கலை வளர்ச்சிப் பணியை அரசாங்கமே மேற்கொள்ள வேண்டும் என்ற உயரிய கருத்தில் இக்கல்லூரி தொடங்கப்பட்டது. இக்கல்லூரி அமைப்புக்குத் திட்டம் தீட்டியவர் காலஞ்சென்ற பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி அவர்கள். கல்லூரி ஸ்தாபிக்கப்பட்டவுடன் அவரே நிர்வாக ஆலோசகராக இருந்து இதில் போதனை முறைகளைச் சிறப்புற வகுத்துத் தந்தார். இசையுலக ஜாம்பவான் ஸ்ரீ முசிறி சுப்பிரமணிய அய்யரவர்களை முதல் முதல்வராகப் பெறும் பேறு இக்கல்லூரிக்குக் கிட்டியது. காலம்சென்ற திருப்பாம்புரம் சுவாமிநாத பிள்ளை, திருவாலங்காடு சுந்தரேசய்யர், மாயூரம் கிருஷ்ணய்யர் போன்ற பெரும் வித்வான்களின் சேவை இக் கல்லூரியின் வளர்ச்சிக்கு உதவியது. ஸ்ரீ சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை, பூதலூர் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள், ஸ்ரீமதி டி. பிருந்தா, ஸ்ரீ எம். ஏ. கல்யாணகிருஷ்ண பாகவதர், ஸ்ரீ கே. பி. சிவானந்தம் போன்ற தேர்ந்த இசைக் கலைஞர்கள் இங்கு பதவி வகித்திருக்கிறார்கள்.

ஸ்ரீ செம்மங்குடியும், ஸ்ரீ வி. எஸ். ஜயராமனும் இக்கல்லூரியில் கௌரவ இயக்குநர்களாக இருந்திருக்கிறார்கள். தற்போது ஸ்ரீ சந்தியாவந்தனம் ஸ்ரீநிவாச ராவ் அவர்களின் தலைமையில் இருபத்திரண்டு கலைமணிகள் இங்கு ஆசிரியர்களாகப் பணியாற்றி இசை வளர்த்து வருகின்றனர்.

இங்கு படிப்பை முடித்துத் தேறியவர்களுக்கு ' சங்கீத வித்வான்'' என்ற பட்டம் வழங்கப்படுகிறது. இப்பட்டம் பெற்றவர்களுக்கு ஓராண்டு கால இசையாசிரியப் பயிற்சியும் அளிக்கப்படுகிறது. வாய்ப்பாட்டு, வீணை, வயலின் இவற்றோடு புதிதாக மிருதங்கம், புல்லாங்குழல் இவற்றிலும் பயிற்சி தரப்படுகிறது. தமிழகத்தின் விசேஷக் கோவில் வாத்தியமான நாதசுரம் — தவில் இவற்றில் மூன்றாண்டுப் பயிற்சி தந்து 'வித்யா விசாரத' பட்டம் வழங்கப்படுகிறது.

வெளி மாநிலத்தவரும், வெளிநாட்டவரும் கூட ஆர்வத்துடன் வந்து சேரும் இக் கல்லூரியில் இன்று 180 மாணவ மாணவியர் இருக்கிறார்கள். மாணவிகளுக்கு விடுதி வசதியும் உள்ளது.

தொடக்கத்தில் மத்திய-மாநில அரசுகளின் உதவியோடு நிறுவப்பட்ட இக்கல்லூரி, பிற்பாடு முற்றிலும் தமிழ்நாடு அரசு கல்வித் துறையின் கீழேயே செம்மையாக இயங்கி வருகிறது.

ஏப்ரல் 3, 4, 5 தேதிகளில் வெள்ளி விழாக் கொண்டாடுகிறது. அருந் தொண்டாற்றி லலிதக் கலை வளர்க்கும் கர்நாடக சங்கீதக் கல்லூரி. விழாவில் மாநில ஆளுநர், முதல்வர் முதலியோர் பங்குபற்றுகின்றனர். ஸ்ரீ செம்மங்குடி ஸ்ரீமதி எம். எஸ்., ஆகியோரின் இசை நிகழ்ச்சிகளும், குமாரி மீனாட்சி சபாநாயகம் நடன நிகழ்ச்சியும் நடக்கவிருக்கின்றன. ஸ்ரீ முசிறி அவர்களின் உருவப் படம் திறந்து வைக்கப்படுகிறது. என்றென்றும் இக் கல்லூரி நமது கர்நாடக இசையைத் தரம் குன்றாமல் காத்துத் தீந்து புகழ் பெறுமாக!





**பல் வைத்தியர்கள் கூறுகிறார்கள்:**

# தவறாமல் பிரஷ் கொண்டு பல் துலக்கி, ஈறுகளைத் தேய்த்துக் கொடுத்தால், ஈறு உபாதைகளையும் பற்சிதைவையும் தடுக்கலாம்.

## போர்ஹென்ஸ் பற்பசையைத் தவறாமல் உபயோகிப்பவர்கள் தாங்களாகவே கூறுகிறார்கள்:

"இப்பொழுது எனக்கு வயது இருபது. நான் பனிரெண்டு வயது முதலே போர்ஹென்ஸ் உபயோகித்து வருகிறேன். முதன் முதலாக போர்ஹென்ஸ் உபயோகிக்கத் தொடங்கியபோது, என் ஈறுகளுக்கு சிறிது தொல்லை ஏற்பட்டது. ஆனால் இப்போது அது சரியாகிவிட்டது; தொல்லை ஏதும் இல்லை... முதலில் நான் இரவில் பற்களைத் துலக்குவதில்லை. இரவில் 10 மணிவரை படிப்பது வழக்கம். அப்போது தினமும் உங்கள் விளம்பரம் 'ஒரு புதிய பழக்கத்தை நினைவுறுத்தும்'"

(கையொப்பம்)
எஸ். மித்தல், பி.ஏ. (எலெக்ட்ரிகல்),
பாட்டியாலா.

"நான் புகை பிடிப்பவன் அல்ல. எனினும், ஓர் ஆண்டுக்கு முன்பு, என் பற்கள் மஞ்சளாக இருப்பதைக் கவனித்தேன். முப்பது ஆண்டுகளாக போர்ஹென்ஸ் உபயோகித்து வரும் என் தந்தை, நான் உபயோகித்து வந்த பற்பசையை விட்டு விட்டு, போர்ஹென்ஸுக்கு மாற்றிக் கொள்ளச் சொன்னார். அப்படியே செய்தேன்; என்ன ஆச்சரியம்! இப்பொழுது என் பற்கள் வெண்மையாகப் பளிச்சிடுகின்றன. அதற்குக் காரணம் உங்கள் போர்ஹென்ஸ் பற்பசைதான். நீங்கள் கூறும் சிறப்புகள் அனைத்தும் அதில் உள்ளன. **ஒரு பல் வைத்தியரால் உருவாக்கப்பட்ட பற்பசை** அது என்பது மட்டுமே போதும் அதன் சிறப்புக்கு!

(கையொப்பம்) எஸ்.எஸ். சட்டர்ஜி,
கோயம்புத்தூர்.




(மேற்கண்ட சான்றிதழ்களின் புகைப்பட நகலை ஜெப்ரி மேனர்ஸ் & கம்பெனி லிமிடெட்டின் எந்த அலுவலகத்திலும் காணலாம்.)

சீரான பற்பராமரிப்புக்கு இரவிலும் காலையிலும் போர்ஹென்ஸ் பற்பசை மற்றும் போர்ஹென்ஸ் டபிள்-ஆக்ஷன் டூத் பிரஷ் உபயோகியுங்கள்... உங்கள் பல் வைத்தியரையும் தவறாமல் கண்டு வாருங்கள்.

**இலவசம்!** "உங்கள் பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்னும் விவரமான வண்ணப் புத்தகம்.
இப்புத்தகம்* பெற (தபால் செலவுக்காக) 25 பைசா தபால் தலையுடன் இக் கூப்பனை "மேனர்ஸ் டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை 10031, பம்பாய்-1" என்னும் முகவரிக்கு அனுப்புக.

பெயர் ______________________ வயது ______ K.6

முகவரி ______________________________

*எந்த மொழியில் வேண்டுமோ, அதன் கீழ் கோடிடவும். ஆங்கிலம், இந்தி, மராத்தி, குஜராத்தி, உருது, பஞ்சாபி, வங்காளி, அஸ்ஸாமி, தமிழ் தெலுங்கு, மலையாளம், கன்னடம்.

**போர்ஹென்ஸ்** – பல் வைத்தியரால் உருவாக்கப்பட்ட பற்பசை

129 F-182 TAM

# சிவகாமியின் சபதம்



அமரர்
கல்கி

## இருபத்திரண்டாம் அத்தியாயம்
## அசோகபுரத்தில்

காஞ்சிமா நகரத்திலிருந்து ஏழு காத தூரத்தில், தில்லைப் பகுதிக்குப் போகும் மார்க்கத்தில், அசோகபுரம் என்னும் ஊர் இருந்தது. இந்த ஊரின் மத்தியில், பரத கண்டத்தை ஒரு குடை நிழலில் ஆண்ட சக்கரவர்த்திகளுக்குள்ளே ஒப்புயர்வற்ற தர்மசக்கரவர்த்தியான அசோகவர்த்தனர் தேசமெங்கும் நிலைநாட்டிய ஸ்தம்பங்களில் ஒன்று கம்பீரமாய் நின்றது.

ஒரு காலத்தில் இந்த அசோக ஸ்தம்பத்தைச் சுற்றியிருந்த புத்த விஹாரங்களில் ஓராயிரம் புத்த பிக்ஷுக்கள் வாசம் செய்தார்கள். புத்த மதத்தைச் சேர்ந்த கிருகஸ்தர்கள் வாழ்ந்த ஆயிரக்கணக்கான வீடுகளும் இருந்தன. மாலை நேரத்தில் புத்த சைத்தியங்களில் பகவான் புத்தருக்கு ஆராதனை நடக்கும்போது தூபங்களிலிருந்து எழும் நறுமணப் புகையானது ஊரையெல்லாம் கவிந்திருக்கும். நூற்றுக்கணக்கான பூஜை மணிகள் கணகணவென்று ஒலித்துக் கொண்டிருக்கும். புத்தரின் சன்னதியில் ஆயிரக் கணக்கான தீபங்கள் ஜொலித்துக் கொண்டிருக்கும். பிக்ஷுக்களும், கிருகஸ்தர்களும் கையில் புஷ்பம் நிறைந்த தட்டுகளை ஏந்திக் கொண்டு பத்தி பத்தியாகச் சைத்தியங்களுக்குப் போய்க் கொண்டிருப்பார்கள்.

அத்தகைய அசோகபுரமானது இப்போது பாழடைந்து நிர்மானுஷ்யமாய்க் கிடந்தது. சைத்தியமும் விஹாரமும் சேர்ந்து அமைந்த ஒரே கட்டடத்திலே மட்டும் ஒரு சிறு தீபத்தின் ஒளி காணப்பட்டது. மற்றக் கட்டடங்கள் இடிந்து தகர்ந்து பாழாய்க் கிடந்தன. இடியாத கட்டடங்களில் இருள் சூழ்ந்திருந்தது.

தொள்ளாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் அசோக சக்கரவர்த்தியால் நிலைநாட்டப்பட்ட தர்மபோதனை ஸ்தம்பம் மாத்திரம் தாவள்யமான சந்திரிகையில், ''தர்மத்துக்கு என்றும் அழிவில்லை'' என்பதை ஸ்தாபித்துக் கொண்டு தலைதூக்கி நின்றது.

இத்தகைய அசோகபுரத்துக்கு இருட்டி இரண்டு நாழிகைக்குப் பிறகு ஆயனரும் சிவகாமியும் மற்றவர்களும் வந்து சேர்ந்தார்கள்.





அவர்கள் அசோகருடைய ஸ்தம்பத்தின் அருகில் வந்த போது ஆயனர் வானை நோக்கி நெடிதோங்கி நின்ற அந்த ஸ்தம்பத்தை அண்ணாந்து நிலா வெளிச்சத்தில் பார்த்தார். அதுவரை அவர்களுக்குள் நிலவிய மௌனத்தைக் கலைத்துக் கொண்டு, ''ஆஹா! அசோக சக்கரவர்த்தி எத்தகைய சர்வோத்தமர்! உலகத்திலே தோன்றும் அரசர்கள், சக்கரவர்த்திகள் எல்லாம் அசோகரைப் போன்றவர்களா யிருந்தால், இந்தப் பூவுலகம் எவ்வளவு ஆனந்த மயமாயிருக்கும்? யுத்தம் என்னத்துக்கு? பகைமை என்னத்துக்கு? ஒருவருடைய இரத்தத்தை ஒருவர் சிந்துவது என்னத்துக்கு? பூவுலக மாந்தர்கள் எல்லாம் ஒருவர்க்கொருவர் அன்பு செய்து கொண்டு அஹிம்சையை மேற்கொண்டு ஆனந்தமாய் வாழலாகாதா?'' என்றார்.

அப்போது சிவகாமி குறுக்கிட்டு, ''அப்பா! இதென்ன? சற்று முன்னாலேதான் உங்களுக்கும் கத்தி எடுத்துக் கொண்டு யுத்தம் செய்ய ஆசை உண்டாவதாய்ச் சொன்னீர்கள். இப்போது அன்பு, அஹிம்சை, ஆனந்தம் என்கிறீர்களே? உங்களுடைய மனம் இப்படிச் சஞ்சலம் அடைந்து நான் பார்த்ததேயில்லை!'' என்றாள்.

''உண்மைதான், சிவகாமி! என் மனம் இப்போதெல்லாம் ஒரு நிலையில் இல்லை. புத்த பகவான் இந்த உலகத்தில் அன்பின் ஆட்சியை நிலைநாட்டப் பார்த்தாரே? அவருடைய பிரயத்தனம் ஏன் வீணாகப் போயிற்று என்பதை நினைத்து என் மனம் சஞ்சலப்படுகிறது'' என்றார் ஆயனர்.

பிக்ஷு அப்போது வாய் திறந்து, ''ஆயனரே! புத்த பகவானுடைய



போதனையை ஏற்றுக் கொள்ளும் பக்குவம் மனித குலத்துக்கு இன்னும் ஏற்படவில்லை! அதற்கு என்ன செய்வது?'' என்றார்.

யாரும் எதிர்பாராதபடி குண்டோதரன் சம்பாஷணையில் கலந்துகொண்டு, ''மனித குலம் என்று பொதுப்படையாகச் சொன்னால் என்ன பிரயோசனம், அடிகளே! பிராணிகளிலே புலியும் இருக்கிறது. பசுவும் இருக்கிறது. ஜந்துக்களிலே பாம்பும் இருக்கிறது. அணிலும் இருக்கிறது. அது போலவே மனிதர்களுக்குள்ளும் எத்தனையோ வித்தியாசம் இருக்கிறது. மௌரிய வம்சத்து அசோகவர்த்தனரைப் போலவேதான் நம் மகேந்திர பல்லவரும் தம் இராஜ்யத்தில் அன்பு மதத்தை ஸ்தாபிக்க முயன்றார். யுத்தம் என்பதே வேண்டாம் என்று நினைத்தார். அதைக் கெடுப்பதற்கு ஒரு புலிகேசியும், ஒரு துர்விநீதனும், ஒரு பாண்டியனும் புறப்பட்டு வந்தால் மகேந்திர பல்லவர் என்ன செய்வார்? பூலோகத்தில் பாம்பு இருக்கும் வரையில் கீரிப் பிள்ளையும் இருக்க வேண்டியதுதான். கீரிப் பிள்ளை இல்லாவிட்டால், மனிதனாவது தடியை எடுத்துப் பாம்பை அடித்துத்தானே தீர வேண்டும்?'' என்றான்.

''அடே, அப்பா! நம் குண்டோதரன் இவ்வளவு வாசாலகன் என்று எனக்குத் தெரியவே தெரியாதே!'' என்றார் ஆயனர். புத்தபிக்ஷுவோ அருவருப்புடனும் ஆத்திரத்துடனும் அவனை நோக்கினார்.

சிவகாமி, ''குண்டோதரன் சொல்வது நியாயம், அப்பா! உலகத்தில் பொல்லாதவர்கள் இருக்கும் வரையில் அவர்களை அடக்கக்கூடிய வீர புருஷர்களும் வேண்டும் அல்லவா?'' என்றாள்.

''ஆம், சிவகாமி, ஆமாம்! அது மட்டுமல்ல. உலகத்தில் எல்லாம் அன்பு மயமாய்ப் போய்விட்டால், வீரம் என்பதே இல்லாமற் போய்விடும். வீரம் இல்லாத உலகம் என்ன உலகம்? அப்புறம் கதை ஏது, காவியம் ஏது, கலைதான் ஏது?'' என்றார் ஆயனர்.

குண்டோதரன், ''குருவே! நான் ஒன்று சொல்லட்டுமா? இந்த அசோகர் ஸ்தம்பம் இங்கே வெறும் ஸ்தம்பமாக நின்று கொண்டிருப்பதில் யாருக்கு என்ன பிரயோசனம்? இதில் உள்ள உபதேசத்தைப் படித்து அதைப் பின்பற்றி நடப்பார் யார்? இந்த ஸ்தம்பத்தை என்ன செய்ய வேண்டும் என்று நான் சொல்லட்டுமா?''..... என்று கூறிக் கொண்டே, அவன் ஸ்தம்பத்தைக் கையினால் தட்ட அது, 'டாண்! டாண்!' என்று ஒலி செய்தது.



பின்னர், ''நல்ல எஃகினால் செய்திருக்கிறது: இதைக் கொல்லன் உலையில் போட்டு உருக்கி, வாட்களாகவும் வேல்களாகவும் செய்ய வேண்டும். இந்த ஸ்தம்பத்தை உருக்கினால், குறைந்த பட்சம் பத்தாயிரம் வாட்களும் வேல்களும் செய்யலாம்!'' என்றான் குண்டோதரன்.

அசோக ஸ்தம்பத்தின் அருகில் மேற்கண்ட சம்பாஷணை நடந்து கொண்டிருக்கையில் நாகநந்தி சற்று முன்னாலேயே நடந்து சென்று அருகில் இருந்த புத்த விஹாரத்தை அடைந்தார். அதே சமயம் விஹாரத்துக்குள்ளே யிருந்து வயோதிக பிக்ஷு ஒருவர் கையில் தீபத்துடன் வாசலில் வந்தார். அந்தத் தீபத்தின் வெளிச்சத்தில் விஹாரத்தின் வாசலிலே நின்று கொண்டு, பிக்ஷு குண்டோதரன் கொண்டு வந்த ஓலையைப் படித்தார். அப்போது அவருடைய முகத்தில் உண்டான மாறுதலைத் தீபச் சுடரின் சிவந்த ஒளியில் பார்த்துக் கொண்டிருந்த வயோதிக பிக்ஷுவே பயந்து போனார் என்றால், மற்றவர்கள் பாராததே நல்லதாய்ப் போயிற்று என்று சொல்ல வேண்டும்.



நாகநந்தி ஓலையைப் படித்து முடித்ததற்கும் ஆயனர் முதலியோர் விஹாரத்தின் வாசலில் வந்ததற்கும் சரியாயிருந்தது. உடனே அவர் தமது முகத்திலும் குரலிலும் அமைதி வருவித்துக்கொண்டு மற்றொரு பிக்ஷுவைப் பார்த்து, ''சுவாமி! இவர்கள் எல்லாம் ஐந்தாறு தினங்கள் தங்கியிருக்கும்படி நேரிடலாம். அதற்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்து கொடுக்க வேண்டும்'' என்று கூறினார். பின்னர் ஆயனரைப் பார்த்துச் சொன்னார்:

''ஆயனரே! உம்முடைய சீடனுக்கு உண்மையில் நான் நன்றி செலுத்த வேண்டும். இந்த ஓலையில் மிகவும் முக்கியமான விஷயந்தான் அடங்கியிருக்கிறது. இதைக் கொண்டு வந்தவனை ஏரியிலே தள்ளிவிட்டபோதிலும் ஓலையைக் கொண்டு வந்தானல்லவா? இந்த ஓலையில் அடங்கிய விஷயத்தைக் கவனிப்பதற்காக நான் அவசரமாய்ப் போக வேண்டியிருக்கிறது. திரும்பி வருவதற்கு இரண்டு மூன்று நாட்கள் ஆனாலும் ஆகலாம். அதுவரையில் நீங்கள் இங்கேயே சுகமாகத் தங்கியிருங்கள். இந்தப் பிக்ஷு உங்களுக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்து கொடுப்பார். மேலும் உங்களுக்கு ஒத்தாசையாகக் குண்டோதரனும் வந்து சேர்ந்து விட்டானல்லவா?''

இந்தக் கடைசி வாக்கியத்தைச் சொல்லும்போது குண்டோதரனுடைய மார்பையே கீறி உள்ளே பார்ப்பது போல் பார்த்த நாகநந்தி மறுகணம் சிவகாமியை நோக்கி, கனிவு ததும்பிய குரலில், ''சிவகாமி! உங்களை அழைத்துக் கொண்டு வந்து இப்படி நடு வழியில் விட்டுவிட்டுப் போகிறேனே என்று நினைக்காதே! மிகவும் அவசர காரியமானபடியாலேதான் போகிறேன். சீக்கிரத்தில் திரும்பி வந்து உங்களுடன் சேர்ந்து கொள்வேன்'' என்றார்.

அநேகமாக எல்லாப் புத்த விஹாரங்களிலும் உள்ளதுபோல் இந்தப் பாழடைந்த விஹாரத்திலும் நடுவில் புத்தர் சந்நிதி இருந்தது. இரண்டு பக்கங்களிலும் பிக்ஷுக்கள் வசிப்பதற்குரிய அறைகள் இருந்தன. ஒரு பக்கத்து அறைகள் ஆயனருடைய குடும்பத்துக்காக ஒழித்துக் கொடுக்கப்பட்டன.

அவர்கள் தங்களுடைய அறைகளுக்குச் சென்ற பிறகு, இன்னொரு பக்கத்திலிருந்த இருண்ட அறைகளுக்கு நாகநந்தி சென்றார்.

### இருபத்துமூன்றாம் அத்தியாயம்

## தோற்றது யார்?

சிவகாமிக்கு அன்றிரவு வெகுநேரம் வரையில் தூக்கம் வரவில்லை; அன்று குண்டோதரன் கூறிய விஷயங்களையெல்லாம் எண்ணி எண்ணிப் பார்த்துக் கொண்டிருந்தாள். குமார சக்கரவர்த்தியைப் பற்றி நாகநந்தி கூறிய அவதூறுகளைத் தான் முழுதும் நம்பிவிட்டதை நினைந்து வெட்கினாள். நாகநந்தியின் பேரில் அவளுக்குக் கோபம் கோபமாய் வந்தது. அவருடைய பொய்மொழிகளைக் குறித்துக் கேட்டு, அவரை ஏளனம் செய்ய வேண்டும் என்ற ஆவல் அவள் மனத்தில் பொங்கிக் கொண்டிருந்தது.

# பள்ளிக்குப் போகும்போதும், வரும்போதும் பள்ளியிலும்

நியூட்ரின் மிட்டாய்களில் ஒரு முழுமையான புதிய சுவைகள் நிறைந்த இனிய உலகத்தை அவர்கள் காண்கிறார்கள். வாயில் நீர் ஊறச் செய்து இன்பமூட்டும் கோகோனட் பான் பான்கள், காபி டாபிகள், ஆரஞ்சு காண்டிகள், லாக்டோ பான் பான்கள் பால், தேன், மால்ட் சர்க்கரைச் சத்து நிறைந்தவை. அவைகள் மிட்டாய்கள் மட்டுமல்ல; அதனினும் மேலானவை. அதி அற்புத நியூட்ரின் உலகினிற்கு உங்கள் குழந்தைகளையும் அறிமுகம் செய்யுங்கள்.



## குழந்தைகள் பேசுவதெல்லாம் நியூட்ரினைப் பற்றியே

# நியூட்ரின்

தின்னத் தின்ன திகட்டாத மிட்டாய்




நியூட்ரின் கன்பெக்ஷனரி கம்பெனி பிரைவேட் லிமிடெட்,
பலமனேர் ரோடு, சித்தூர். (ஆ.பி.)

# ஓரியண்ட்






டெஸ்க் மின்விசிறி

## வலிமை மிக்கது
## ஓசையற்றது
## நம்பிக்கை வாய்ந்தது

ஓரியண்ட் மின்விசிறிகள் நவீன மோஸ்தரில் கட்டப்பட்டுள்ள வீடுகள், ஆபீஸ்கள் மற்றும் அலுவலகங்களின் எழிலுக்கு ஏற்றவாறு இணைந்து பரிமளிக்கும் வகையில் அற்புதமாக உருவாக்கப்பட்டுள்ளன. உங்களுடைய குறிப்பிட்ட தேவைகளுக்கு தகுந்தவாறு பற்பல விதங்களில் கிடைக்கின்றன—ஸீலிங், டேபிள், டெஸ்க், ஸ்டாண்ட், ஆல் பர்ப்பஸ் மற்றும் எக்ஸ்ஹாஸ்ட் மாடல்கள்.

இந்தியாவின் மிகச் சிறந்த அனுபவமிக்க மின் விசிறி தயாரிப்பாளர்களால் தேர்ந்து அளிக்கப்படும் எல்லாவிதமான ஓரியண்ட் மின் விசிறிகளும் அவற்றின் ஈடிணையற்ற சிறப்புத் தன்மைகளுக்கு இந்தியாவிலும், அயல் நாடுகளிலும் பெயர் பெற்றவை.

எல்லா மின்விசிறிகளும் இரண்டு வருட உத்தரவாதம் உள்ளவை.

**மிக அதிக அளவில் விற்பனையாகும் பெருமை மிக்க நிறுவனங்கள்.**



சூப்பர் டீலக்ஸ் டேபிள் மின்விசிறி



ஸ்டாண்ட் மின்விசிறி



டீலக்ஸ் டேபிள் மின்விசிறி



ஆல் பர்ப்பஸ் மின்விசிறி

## ஓரியண்ட் விசிறி

உலக முழுவதும் தேர்ந்தெடுக்கப்படுபவை

ஓரியண்ட் விசிறி

ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட், 6, கோர் பிபி லேன், கல்கத்தா-54

தொழிற்சாலைகள் : கல்கத்தா, பரிதாபாத்

CC-O-4/73

இத்தகைய எண்ணங்களுக்கிடையில் மாமல்லரின் விருப்பத்தின்படி தான் அரண்ய வீட்டில் இல்லாமற் போனது பற்றி அவருடைய கோபம் எத்தகையதாக இருக்குமோ என்ற கவலையும் தோன்றிக் கொண்டிருந்தது. அதை அவ்வளவு மன்னிக்க முடியாத பெருங் குற்றமாக மாமல்லர் கொள்ளமாட்டார் என்று அவள் தன்னைத் தானே ஆறுதல் செய்து கொண்டாள். இவ்விதம் பலவாறாகச் சிந்தித்துக் கொண்டிருந்து கடைசியில் தன்னையறியாது மேலிட்டு வந்த களைப்பினால் கண்ணயர்ந்தாள்.

அவள் அரைத் தூக்கமாயிருந்த போது சமீபத்தில் எங்கேயோ பெருங் கூக்குரலைக் கேட்டுத் தூக்கிவாரிப் போட்டுக் கொண்டு எழுந்திருந்தாள். கவனித்துக் கேட்டபோது, 'குய்யோ—முறையோ' என்று குண்டோதரன் ஓலமிடும் சத்தமும், அத்துடன், டக் டக் டக் டக் என்று குதிரை பாய்ந்து செல்லும் சத்தமும் கலந்து கேட்டன.

அயர்ந்து தூங்கிய ஆயனரைச் சிவகாமி எழுப்பினாள். இருவரும் வாசலில் வந்து பார்த்தபோது அங்கே ஓலமிட்டுக் கொண்டிருந்த குண்டோதரன், ''ஐயோ! குருவே! என்னுடைய குதிரையைப் பிக்ஷு திருடிக் கொண்டு போய் விட்டார்!'' என்று கூச்சலிட்டான். ஆயனர் அவனுக்கு, ''அப்பனே! அந்தக் குதிரை உன்னுடையதல்லவே!'' என்று சமாதானம் சொல்லிப் பார்த்தார்.

குண்டோதரன் ''அப்படித்தான் நாகநந்தி குதிரையைத் திருடிக்கொண்டு போனாரே? என் மேல் என்னத்துக்காகப் பாம்பைப் போட வேண்டும்?'' என்று அலறினான்.

''அது என்ன சமாசாரம்?'' என்று ஆயனர் கேட்டதற்கு, குண்டோதரன் கூறிய விவரமாவது: புத்தபிக்ஷு இரகசியமாய் எழுந்து வந்து வாசலில் கட்டியிருந்த குதிரையை அவிழ்த்து அதன் மேல் ஏறிக் கொண்டார். அதே சமயத்தில் தற்செயலாய்க் கண் விழித்த குண்டோதரன் ஓடிக் குதிரையைப் பிடித்தான். பிக்ஷு தம் கையிலிருந்து ஒரு பையை அவிழ்த்து அதற்குள்ளிருந்து எதையோ எடுத்து அவன் மேல் வீசினார். அது ஒரு நாகப்பாம்பு என்று கண்டதும், குண்டோதரன் அலறிக் கொண்டு அப்பால் ஓட, குதிரையை விட்டுக் கொண்டு பிக்ஷு போய் விட்டார்.

குண்டோதரனுடைய வார்த்தையில் ஆயனருக்கும் சிவகாமிக்கும் நம்பிக்கை உண்டாகவில்லை. ஏதோ உளறிக் கொட்டுகிறான். ஒரு வேளை கனவு கண்டானோ, என்னவோ என்று நினைத்தார்கள்.

குண்டோதரன், ''குருவே! என்னுடைய அருமைக் குதிரையை விட்டு விட்டு என்னால் இருக்க முடியாது. எப்படியாவது திரும்பப் பிடித்துக் கொண்டு வந்து சேர்வேன்!'' என்று சொல்லி விட்டு, குதிரை போன திசையில் அவனும் ஓடி மறைந்தான்.

* * *

ஆயனரும் சிவகாமியும் அசோகபுரத்துக்கு வந்து புத்தவிஹாரத்தில் வசிக்கத் தொடங்கி ஐந்து தினங்கள் ஆயின.

முதல் மூன்று நாள் விசேஷம் ஒன்றும் நடைபெறவில்லை. சிவகாமிக்குப் பொழுது போவது கஷ்டமாயிருந்தது. ஆயனருக்கு அதைவிடக் கஷ்டமாயிருந்தது. ஆனால், புத்தபிக்ஷுவின் துணையை நம்பி வந்தவர்களாகையால், அவருடைய யோசனை இல்லாமல் மேலே எங்கே போவது என்பதை ஆயனரால் நிச்சயிக்கக்கூடவில்லை. குண்டோதரன் கூறிய விவரங்களைக் கேட்ட பிறகு சிவ



காமிக்கு மேலே போகும் ஆவலே இல்லாமல் போய்விட்டது. ''திரும்பிக் காஞ்சிக்குப் போனால் என்ன?'' என்ற எண்ணம் அடிக்கடி தோன்றியது.

இந்த நிலைமையில், அவர்கள் அசோகபுரத்துக்கு வந்த நாலாம் நாள் இரவு சில அபூர்வ சம்பவங்கள் நடைபெற்றன.

அன்று அஸ்தமன நேரத்தில் எங்கேயோ வெகுதூரத்தில் வான முகட்டின் அருகில், இடைவிடாமல் இடிஇடிப்பது போன்ற சத்தம் முதலிலே வெகு இலேசாகக் கேட்டது. உற்றுக் கேட்கக் கேட்க, சத்தம் அதிகமாகி வந்ததாகத் தோன்றியது. சற்று நேரத்துக்கெல்லாம் அதுவே சமுத்திர கோஷம்போல் தொனிக்கத் தொடங்கியது. முதலிலே தூரத்திலிருந்து சமுத்திரம் வர வர நெருங்கி வருவது போலவும் இருந்தது.

திடீரென்று சத்தம் பெரிதாகி, அருகிலே நெருங்கி, பல்லாயிரம் பேர்




ஃபிஜித் தீவுகளில் கிரிக்கெட் ஆட்டம் அறிமுகமாகி இன்று நூறாண்டுகள் ஆகி விட்டதைக் கொண்டாடுவதற்காகத் தபால் தலைகள் வெளியிடப்பட்டுள்ளன. பந்து வீசுகிறவரை ஒரு தபால் தலையிலும் 'பாட்' செய்பவரை மற்றொன்றிலும் காணலாம். அந்நாட்டு வழக்கப்படி வேஷ்டி (துண்டு?) கட்டிக்கொண்டு பந்து வீசுவதாகக் காட்டி யிருப்பது நமது கவனத்தைக் கவர்கிறது.






ஸ்ரீமதி ருக்மிணிதேவி அவர்கள் நடனக் கலைத் துறையிலும், சமூக நலத் துறையிலும், சைவ உணவுப் பிரசாரத்துக்காகவும், மிருகங்களின் நலனுக்காகவும் கல்வித் துறையிலும் ஆற்றி யுள்ள அளப்பரிய பணிகளைப் பாராட்டி அவரைக் கௌரவிக்க பம்பாய், பாரதீய வித்யா பவன் விழா எடுத்தது. ஸ்ரீ நாராயண மேனன், ஸ்ரீ டி.வி. ராமானுஜம், ஸ்ரீமதி லீலாவதி முன்ஷி முதலி யோர் பங்கு பற்றினர். ஸ்ரீமதி ருக்மிணி தேவியின் ஆரம்ப கால சிஷ்யையும் பரோடா பல்கலைக் கழகத்தில் தற்போது நாட்டியப் பேராசிரியையாக விளங்குகிறவரு மான ஸ்ரீமதி அஞ்சலி வாழ்த் துரை வழங்குகிறார்.

---

தடதடவென்று ஓடி வருவது போன்ற சத்தமாக மாறிற்று.

ஆயனரும் சிவகாமியும் உள்ளே யிருந்து வாசற் பக்கம் ஓடி வந்து பார்த் தார்கள். சற்றுத் தூரத்தில் மரங் களின் இடுக்கு வழியாகச் சிதம்பரம் சாலை தெரிந்தது. அதிலே அநேகம் பேர் தலை கால் தெரியாமல் ஓடிக் கொண்டிருந்த காட்சி புலப்பட்டது.

அந்தக் கூட்டத்தின் நடுவே அம் பாரி வைத்த பெரிய யானை ஒன்று அதி விரைவாக நடந்து சென்றது. அதைச் சூழ்ந்து ஏழெட்டுக் குதிரைகளும் சென் றன. குதிரைகள் மேல் ஆயுதபாணி களான ஆட்கள் இருந்தார்கள். அதே கூட்டத்தில் ஒருபுறத்தில் உயரமான கொடி மரம் ஒன்றைத் தூக்கிக் கொண்டு ஓடிய சிலர் காணப்பட் டார்கள். அந்தக் கொடி தாறுமாறாய்க் கிழிந்திருந்தது.

அதற்குப் பிறகு அன்றிரவெல்லாம் பத்துப் பத்துப் பேராகவும், ஐம்பது நூறு பேராகவும், அதற்கு மேற்பட்ட கூட்டமாகவும் அடிக்கடி சாலையில் மனிதர்கள் தடதடவென்று ஓடிய சத்தம் கேட்டுக் கொண்டேயிருந்தது.

சில சமயம் அசோக ஸ்தம்பத்தைச் சுற்றிக்கொண்டு புத்தவிஹாரம் இருந்த பாழும் வீதி வழியாகவும் சிற்சில கூட் டத்தார் ஓட்டமும் நடையுமாகச் சென் றதைச் சிவகாமி கவனித்தாள்.

இதை யெல்லாம் பற்றிச் சிவகாமி ஆயனரைக் கேட்க, அவர், ''எங் கேயோ யுத்தம் நடந்திருக்கிறது. அம்மா! யுத்தத்தில் ஒரு கட்சி தோற்று விட்டதாகத் தெரிகிறது. தோற்ற வர்கள்தான் இப்படி நிலைகுலைந்து ஓடு வார்கள்!'' என்றார்.

'' அப்பா! தோற்றவர்கள் பகை வர்களாகத்தான் இருக்க வேண்டும்.

ஓடுகிறவர்களைப் பார்த்தால், பல்லவ வீரர்களாகத் தோன்றவில்லையல்லவா?'' என்றாள் சிவகாமி.

''நாம் என்னத்தை அம்மா கண்டோம்? இருட்டிலே என்ன தெரிகிறது? மாமல்லர் படைத் தலைமை வகித்த கட்சி ஜயித்திருக்க வேண்டும் என்றுதான் நானும் கருதுகிறேன்'' என்றார் ஆயனர்.

இவ்வளவு தடபுடலும் இரவு முடிந்து பொழுது விடிவதற்குள்ளாக நின்றுவிட்டது. சூரியோதயத்துக்குப் பிறகு சத்தம், சந்தடி, ஓட்டம் ஒன்றுமே இல்லை.

சிவகாமி புத்தவிஹாரத்தின் வாசலில் நின்று சாலையை நோக்கியவண்ணம் இருந்தாள். யாராவது அந்தப் பக்கம் வரமாட்டார்களா ? — வந்தால் நேற்று இரவு நிகழ்ச்சிகளைப் பற்றி அவர்களிடம் விசாரிக்கலாமே என்று காத்திருந்தாள்.

சூரியன் உதயமாகி ஒரு ஜாமம் இருக்கும். காலையிலிருந்து குடிகொண்டிருந்த நிச்சப்தம் சட்டென்று கலைந்தது.

சாலையோடு குதிரைகள் பாய்ந்து வரும் சத்தம் கேட்டது.

அடுத்தாற்போல் குதிரைகளும் காணப்பட்டன. அப்பப்பா ! எவ்வளவு குதிரைகள் ? பத்து ஐம்பது, நூறு, ஆயிரம்கூட இருக்கும்போலிருக்கிறதே ? அவ்வளவு குதிரைகள் மீதும் வேலும் வாளும் பிடித்த வீரர்கள் எவ்வளவு உற்சாகமாக அமர்ந்திருக்கிறார்கள்? அந்தக் குதிரைப் படையின் மத்தியில் ஒரு கம்பீரமான கருநிறக் குதிரையின் மேல் ஒரு வீரன் ரிஷபக் கொடியைத் தூக்கிப் பிடித்துக்கொண்டிருப்பதைக் கண்டதும், சிவகாமியின் உள்ளமும் தோள்களும் பூரித்தன. அவள் நினைத்தபடியே பகைவர்கள்தான் தோற்று ஓடுகிறார்கள் என்றும், பல்லவ சைனியம்தான் ஓடும் பகைவர்களைத் தொடர்ந்து செல்கிறதென்றும் தீர்மானித்துக் கொண்டாள்.

அந்தப் பெரிய குதிரைப் படை சாலையோடு போய்ச் சற்று நேரத்துக்கெல்லாம் இரண்டு தனிக் குதிரைகளும், அவற்றின் பின்னால் ஒரு ரதமும் விரைந்து வருவது காணப்பட்டது. இதென்ன விந்தை ? அந்த இரு குதிரைகளும் ரதமும் சாலையிலிருந்து குறுக்கே திரும்பி அசோக ஸ்தம்பத்தையும் சிவகாமி இருந்த புத்த விஹாரத்தையும் நோக்கி வருகின்றனவே ? குறுக்கு வழியாக அந்தத் தெருவில் புகுந்து சென்று சாலை ஏறி முன்னால் போன குதிரைப் படையைப் பிடிப்பதற்காக இவர்கள் இப்படி வருகிறார்கள் போலிருக்கிறது !

ஆஹா! அந்த முதல் குதிரையின்மேல் வருகிறது யார்? தன் கண்கள் காண்பது உண்மையா? — சிவகாமியின் இருதயம் அப்படியே நின்றுவிடும்போல் இருந்தது!

ஆம்; அதன் மேல் வந்தவர் மாமல்ல நரசிம்மர்தான் !

விஹாரத்தின் வாசலில் நின்ற சிவகாமி திடீரென்று மாமல்லரைக் குதிரை மீது பார்த்ததும், எங்கிருந்தோ, எதனாலோ அவளுடைய கண்களில் கண்ணீர் நிறைந்துவிட்டது. உணர்ச்சி மிகுதியினாலும், காரணந் தெரியாத நாணத்தினாலும், சிவகாமி சட்டென்று திரும்பி, உள்ளே போவதற்குக் காலை எடுத்து வைத்தாள்.

அதே சமயத்தில் 'ஆ!' என்ற குரல் ஒலியும், வேகமாக வந்த குதிரையைத் திடீரென்று இழுத்துப் பிடித்து அது 'தட்தட்' என்று கால்களைத் தட்டிக் கொண்டு நிற்கும் சத்தமும் கேட்டன.

சிவகாமி வீதிப் பக்கம் திரும்பிப் பார்த்தாள்.

மாமல்லருடைய கண்கள் தீவிரமான நோக்குடன் அவளுடைய நெஞ்சையே



ஊடுருவுவதுபோல் பார்த்தன. அந்தப் பார்வையில் சொல்ல முடியாத வியப்பும் மகிழ்ச்சியும் அளவிடக்கூடாத அன்பும் ஆத்திரமும் கலந்திருந்தன.

இதெல்லாம் ஒரே ஒரு கணந்தான் ; மறு கணத்தில் குதிரை மீண்டும் காற்றுகப் பறந்து சென்றது.

மாமல்லருக்குப் பின்னால் வந்த தளபதி பரஞ்சோதியும் சிவகாமியைப் பார்த்த போதிலும் அவருடைய குதிரை ஒரு கணமும் நிற்காமல் மேலே சென்றது.

அவர்களுக்குப் பின்னால் வந்த ரதத்தைக் கண்ணபிரான்தான் ஓட்டி வருகிறான் என்று தெரிந்ததும், சிவகாமி மீண்டும் வாசற்புறத்துத் தூணண்டை வந்து நின்று, ரதத்தை நிறுத்தும்படி கையினால் சமிக்ஞையும் செய்தாள் !

கண்ணபிரான் குதிரைகளை இழுத்துப் பிடித்து ரதத்தை நிறுத்தினான். குதிரைகள் திடீரென்று நின்றபடியால், அச்சு முறிவதுபோன்ற சடசட சத்தத்துடன் ரதம் தடக் என்று நின்றது. (தொடரும்)

நீண்ட நேரக் குழப்பத்துக்குப் பின் ஒரு தீர்மானத்துக்கு வந்தார் ராமபத்ரன்.

வேர்த்து விறுவிறுத்துப் போயிருந்தது, அவரது முகம். ஒரு மணியா...? இரண்டு மணியா? தபால்காரர் அந்தக் கடிதத்தைக் கொடுத்துவிட்டுப் போனதிலிருந்து—கிட்டத் தட்ட மூன்றரை மணி நேரமாக மண்டையை உடைத்துக் கொண்டிருக்கிறாரே, வேர்க்காதிருக்குமா ?

இப்போதுதான் புயல் அடித்து ஓய்ந்த அமைதி நிலவியது அவர் முகத்தில்.

இத்தனை நேரமாக அவரது ஊனையும், உயிரையும் வாட்டி வதைத்த அந்தப் பிரச்னை என்ன தெரியுமோ ?

திருமணம்.

மூத்தவள் பாமா. அவளுக்குக் கல்யாணம் செய்து வைக்க கடந்த நாலு வருஷங்களாக முயற்சி செய்கிறார் ராமபத்ரன். முடியவில்லையே !' தரை தட்டிய கப்பலின் கதியாக அன்றோ இருக்கிறது, அவரது சிரத்தை !

ஏன் ?

வரன் ஏதும் வரவில்லையா ?

சொன்னால் மூக்கில் விரலை வைப்பீர்கள்.

ஏழு வரன்கள் வந்தன. அத்தனையும் நல்ல இடங்கள்.

வரும் கடிதத்தை வாசலிலேயே வாங்கிப் படித்துவிட்டு, மனைவியிடம் மட்டும் இரகசியமாய் விஷயத்தைக் கூறுவார்.

வந்து போனவர்களின் முடிவை அறிய, பாமாவின் கண்கள் கொஞ்ச நாட்கள் வரை அப்பாவின் முகத்தையும், அம்மாவின் வாயையும் ஏக்கத்துடன் பார்த்துப் பார்த்து, அலுத்து, அடங்கிப் போகும்.

'முடிவு' வழக்கம்போலத்தான் என்பதைத் தானாகவே உணர்ந்து, தானாகவே

# பாமாவைப் பெண் பார்த்து...



வருவார்கள். வாய் மணக்கச் சாப்பிடுவார்கள். நீரோட்டம் போல் குழைந்து வருவாள் பாமா. அவளது நமஸ்காரத்தைக் கண் குளிர அங்கீகரிப்பார்கள். வந்தவர்கள் அத்தனை பேர் முகத்திலும் புன்னகையே சதிராடும். பிறகுதான்....

'எங்களுக்கு மூத்தவள் வேண்டாம். இளைய பெண்ணைத் தருவதானால் சொல்லுங்கள்... மேற்கொண்டு காரியங்களைக் கவனிக்கலாம்' என்று கூசாமல் கடிதம் வரும்.

பார்த்துப் போன ஏழு இடங்களில் ஐந்து பேர் — காலையில் வந்த கடிதம் உட்பட— இப்படித்தான் பச்சோந்தியாய் மாறினார்கள். மீதி இரண்டு, முகவரியே இல்லை !

ஒவ்வொரு தடவையும் ஓட்டாஞ் சில்லுகள் போல் உள்ளம் நொறுங்கினார் ராமபத்ரன்.

உருகித் தவிப்பாள் அப்பேதை. இச்சோகக் காட்சி அந்த வீட்டைப் பொறுத்தமட்டில் வழக்கமாய்த் தொடர்ந்து நடக்கும் ஓர் ஊமை நாடகம்.

ஆனால் ராமபத்ரன் இன்று விழித்துக் கொண்டார். வந்தவர்கள் பலரும் பெரியவளை விட்டு இளையவளை விரும்பும் காரணம் அவருக்கு இப்போதுதான் புரிய வந்தது.

''அப்பா!''

இன்ஸ்டிட்யூட் விட்டுவந்த ரமா, வாடிக்கையான புன்னகையுடன் தந்தையைப் பார்த்துக் கொண்டே உள்ளே நுழைந்தாள்.

அவள்தான் இளையவள். புஷ்பச் சொரியல் போல் பூரித்த மேனி. கன்னம் இரண்டிலும்



தமிழினியன்

ஒட்டுமாங்கனி பிளந்திருக்கும். பதினாறு வயதுதான். எனினும் பருவத்துக்குரிய முழு திரட்சியும் அவளை ஆட்கொண்டிருந்தது.

ஆனால் பாமா அப்படி இல்லை. அவள் கொஞ்சம் ஒல்லி. நிறத்திலும் ஒரு மாற்றுக் குறைந்திருந்தாள். இவை ஒரு பெண்ணை நிராகரிக்கத்தக்க குறைகளாகிவிடுமா?... அழகிலும், அங்க லாவண்யங்களிலும் சகல சௌந்தரியவதியாகத்தான் அவள் திகழ்ந்தாள். இதை யாராலும் மறுக்க முடியாது.

என்றாலும், ஒப்புமை என்று வைத்தால், ரமாவுக்கு இரண்டு 'மார்க்' அதிகம் போட வேண்டி வரும். அவ்வளவுதான்.

இந்த வித்தியாசத்தை உணரத் தலைப்பட்ட ராமபத்ரனுக்கு உற்சாகம் பெருகியது. சீதையைக் கண்ட ஹனுமானைப் போல் மகிழ்ச்சியுடன் மனைவியைக் கூப்பிட்டார்.

''மீனாட்சி.''

விரைந்து வந்தாள் அவள்.

பயப்பிராந்தியுடன் சுற்றுமுற்றும் ஒருகணம் பார்த்துவிட்டு, தமது 'கண்டு' பிடிப்பை மனைவியிடம் கூறினார் ராமபத்ரன்.

''தப்புத்தான், மீனு! ஆனால், நூறு ரூபாய் தன்னோட தேவைக்குப் போதும் என்று நினைக்கிறவன்கூட, நூற்றியொண்ணு கண்ணுக்குத் தெரிந்தால், அதுதான் வேண்டும் என்பான். மனுஷாள் ஆசை அப்படி. அதே மாதிரிதான் பாமாவையும், ரமாவையும் பார்க்கிறவர்கள், ரமாதான் வேண்டும் என்கிறார்கள். நம்முடைய சங்கடத்தைப் புரிந்து கொள்ளாமல் அவர்கள் அப்படிப் பொறுப்பில்லாமல் கேட்கும்போது, நாம் அதற்குத் தகுந்தாற்போல் நடப்பதுதான் புத்திசாலித்தனம்.''

''என்ன செய்யலாம்?''

நறுக்காகச் சொன்னார் ராமபத்ரன். ''நூற்றியொண்ணை அவர்கள் கண்ணிலே காட்டாமல் மறைத்துவிட்டால்? அதாவது பாமாவின் முகூர்த்தம் நிச்சயமாகும் வரையில் ரமா இந்த வீட்டில் இருக்கக்கூடாது.''

திடுக்கிட்டாள் மீனாட்சி. ''இதென்ன கூத்து? பாமாவுடன் ஒருத்தி உடன்பிறந்ததே பாவம் என்கிறேளா?'' என்றபோது அவளது குரல் விசும்பியது.

''சே...சே ! அப்படிச் சொல்வேனா ? ஒரு சின்ன அட்ஜஸ்ட்மெண்ட். பெரியவன் ரமணி சென்னையில் இருக்கிறான், இல்லையா ? அவனுக்கு ஹோட்டல் சாப்பாடு ஏற்கவில்லை என்று காரணம் காட்டி ரமாவை அவனிடம் கொண்டு போய் விட்டுவிடுவோம். கொஞ்ச நாளைக்கு அவள் அங்கே இருக்கட்டும். பாமாவுக்கு வரன் நிச்சயமானதும், ரமா திரும்பவும் இங்கு வந்துவிடப் போகிறாள். அவ்வளவுதான்'' என்று தமது திட்டத்தை விவரித்தார் ராமபத்ரன்.

'' .....ஆனாலும் நீங்கள் சொல்வதிலும் நியாயம் இல்லாமல் இல்லை. நமக்கு இப்போது ஆக வேண்டியது மூத்த பெண்ணின் கல்யாணம். அதற்காக ரமாவைச் சென்னைக்கு என்ன, சீமைக்கே அனுப்பவும் நாம் தயாராக வேண்டியதுதானே !''

அடுத்த இரண்டாம் நாள்.

சென்னை செல்லும் மலைக்கோட்டை எக்ஸ்பிரஸின் பிரயாணிகள் பட்டியலில் ராமபத்ரனும், ரமாவும் இடம் கொண்டிருந்தனர்.

ரமணிதான் ராமபத்ரனின் பெரிய பையன். சென்னையில் உத்தியோகத்தில் இருக்கிறான். மைலாப்பூரிலிருக்கும் அவனிடம் ரமாவை ஒப்படைத்துவிட்டு, மறுநாளே ஊர் திரும்பினார் ராமபத்ரன்.

அவர் அதிர்ஷ்டம்: அதிசீக்கிரத்திலேயே ஒரு வரன் வந்தது.

வெள்ளிக்கிழமை.

குடந்தையிலிருந்து அவர்கள் வந்தனர்.

''பேஷ்... பேஷ்...! மைசூர்ப்பாகு வெகு அருமை !'' என்று சூள் கொட்டிக்கொண்டு இரண்டு விள்ளல் அதிகமாகவே பிட்டுப் போட்டார், பிள்ளையின் தந்தை.

''எல்லாம் எங்கள் பாமாவின் கைபாகம்!'' சமயம் அறிந்து தகவலைத் திணித்தாள் மீனாட்சி.

''உம்... பெண்ணை வரச் சொல்லுங்கள்.''

தாமரைப் பாதங்களை மெல்ல எடுத்து வைத்துப் பதுமை போல் அசைந்து வந்தாள் பாமா. அவளது செம்பஞ்சு விரல்கள் இணைந்து மரியாதையுடன் நமஸ்கரித்தன.

பாடச் சொன்னார்கள்.

பாடினாள்.

''அபாரம். ஜானகியைப் போல் இருக்கிறதே குரல்!'' என்று மாப்பிள்ளைப் பையனே வாய்விட்டுப் பாராட்டினான்.

விடைபெற்றுக் கொண்டனர்.

ராமபத்ரன் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. ஏனெனில், எந்த ஒரு வரனும் இத்தனை திருப்தியுடன் அவரிடம் விடை பெற்றுக் கொண்டதில்லை.

ஆறாம் நாள்.

''சார்.... போஸ்ட்!''

அறுபது வயது ராமபத்ரன், ஆறு வயதுப் பாலகனைப் போல் வாசலுக்குத் தாவி ஓடினார்.

'சாக்லேட்' சுற்றிய மேல் காகிதத்தைப் பிரிக்கும் குழந்தை பரபரப்புடன் அக்கடித உறையைக் கிழித்தார் அவர்.

'அன்புள்ள ராமபத்ரனுக்கு நமஸ்காரம்.

'உங்களுக்கு இளைய பெண்ணொருத்தி இருக்கிறாளாமே ! நீங்கள்தான் வாய் திறக்கவில்லையென்றால், ஊர் வாயை மூடமுடியுமா சார் ? அவளைப் பற்றிய தகவலை நீங்கள் எங்களிடம் மறைத்தது — ஏடாகூடமாய் நடந்த ஏதோ ஒன்றை மறைத்ததைப் போல் தோன்றுகிறது எங்களுக்கு. அத்துடன், அவளை வீட்டில் வைத்திருந்தால் பெரியவளின் திருமணம் தடைப்படக்கூடும் என்ற அச்சத்தினாலும் நீங்கள் அவளைச் சென்னையில் விட்டிருக்கலாம். உங்களிடம் சம்பந்தம் கொள்ள எங்களுக்கு விருப்பமில்லை. மன்னிக்கவும்......'

'' கடிதம் வந்துவிட்டதா ?'' என்று கேட்டுக் கொண்டே சமையல் அறையைவிட்டு வெளியில் வந்தாள் மீனாட்சி.

''ஓ.... வந்துவிட்டது!'' துயரத்தை அடக்கிக் கொண்டு கடிதத்தைக் கொடுத்தார் ராமபத்ரன்.

கடிதத்தை வாங்கிப் படித்தாள் மீனாட்சி.

''என்ன இது, அக்கிரமம் ? முன்னால் முட்டுதே என்று பின்னால் போனேனும். அதினும் பயங்கரமான இடியாய் இருக்கிறதே !''

''அதுதாண்டீ.... உலகம்.''

''ஆமாப்பா... அதுதான் உலகம்.''

திடுக்கிட்டுத் திரும்பினார் ராமபத்ரன்.

''யார் !... பாமாவா ? நீ இங்கேயா இருந்தாய் ?''

''ஆமாம்'' என்ற பாமா அமைதியுடன் சொன்னாள்.

''அப்பா...! எனக்குக் கல்யாணம் பண்ணி வைக்கணும்கிற ஆசை நியாயமானதுதான். ஆனால்..... எதுக்கும் கால, நேரம் வரணும். அதுவரை நான் காத்திருக்கத்தான் வேணும்.

''காரியத்தைச் சீக்கிரமாய்ச் சாதிக்கக் குறுக்கு வழியில் போனால் அதன் முடிவு இப்படித்தான் அப்பா இருக்கும். இதை நீங்கள் புரிந்து கொள்ளணும் என்றுதான் பக்கத்து வீட்டு லட்சுமியைக் கொண்டு, பிள்ளைவீட்டார் எழுதுவது மாதிரி நானே இப்படி ஒரு கடிதத்தை எழுதிப் போட்டேன்.''

''என்ன.... நீ... எழுதினாயா ?'' நம்ப முடியாத ஆச்சரியத்துடன் கேட்டார் ராமபத்ரன்.

''ஆமாம். அப்பா, ஆமாம் ! தங்கையைத் துரத்தி அடித்துவிட்டு வாழ்வதுபோல் இருக்கிறது எனக்கு. ஒன்றுமே பிடிக்கவில்லை. சீக்கிரமாக அவளை அழைத்து வாருங்கள்!''

''பாமா ! எவ்வளவு தங்கமான மனசடி உனக்கு! இந்தச் சொக்கத் தங்கத்துக்குத் தாலி கட்டி மகிழ இன்னும் எவனுக்கும் கொடுத்து வைக்கவில்லையே !'' என்று பெருமூச்சுவிட்டார் தாயார்.

''ஸார் போஸ்ட் !'' என்று வாசலில் சத்தம் கேட்டது. ''மன்னிக்கணும், சார் ! ஒரு கவர் விட்டுப் போச்சு. மூணாவது வீட்டுக்குப் போயிட்டுத் திருப்பி இங்கே வர்றேன்'' என்று கூறிக் கொண்டே இன்னொரு கடிதத்தைக் கொடுத்துச் சென்றார் தபால்காரர்.

'' அடியே ! கும்பகோணம் தபால் முத்திரை ! அவாதான் எழுதியிருக்கா !'' என்றார் ராமபத்ரன்.

'' நல்ல சேதியாத்தான் இருக்கும். தைரியமா உடைச்சுப் பாருங்கோ !'' என்றாள் அவர் மனைவி.

# சிந்தால் வாக்குறுதி...

*மேனியெழிலுக்கு முழுப் பராமரிப்பு

*புதுமை குன்றாத நறுமணம்

*துர்நாற்றத்திலிருந்து சிறந்த பாதுகாப்பு




...சிந்தால் மட்டுமே நிறைவேற்றக்கூடியது.

## ஆரோக்கியம் அழைக்கிறது

வயிற்று உறுப்புக்களுக்கெல்லாம் சேர்த்து ஒரு மாலை போட்டதுபோல் அமைந்த உறுப்பு பெருங்குடல். பெயரில்தான் 'பெரிய'தே தவிர, நீளத்தில் சிறுகுடலை விடச் சிறியது. சுமார் ஐந்தடி நீளமும் இரண்டரை அங்குல விட்டமும் உள்ள பருமனான குடல் இது.

சிறு குடலிலே பெரும்பாலும் சத்தெல்லாம் உறிஞ்சப்பட்ட உணவு, பெருங்குடல் என்னும் வெளிப் பிராகாரத்தில் வலமாக வந்து மலப்பையை நோக்கி வெளியேறுகிறது. உணவின் நீண்ட பயணத்தில் சுமார் நான்கு ஐந்து மணி நேரம் பயணம் இந்தப் பகுதியிலே நடைபெறுகிறது. அலை அலையாகப் பெருங் குடல் சுருங்கிச் சுருங்கி, கவளம் கவளமாக உணவைத் தன் பாதையிலேயே உருட்டி உருட்டி நகர்த்துகிறது. அப்போது அதிலே எஞ்சியுள்ள சாரம் எது இருந்தாலும் அதை உறிஞ்சிக் கொள்கிறது பெருங் குடல். முக்கியமாக நீர் அம்சங்களையும் உப்புக்களையும் உறிஞ்சுகிறது. சத்தெல்லாம் ஏற்றபின் சக்கையைச் சமயம் பார்த்து வெளியனுப்பும் பொறுப்பு இந்த உறுப்புக்குத்தான்.



சிறுகுடல் முடிந்து, பெருங்குடல் தொடங்கும் இடத்தில் இட்டி வாசல் போல் வழி உண்டு. ஜீரணமான உணவு இதன் வழியே ஒரு தடவைக்கு ஒரு சிறிது அளவாக அகல்கிறது. பெருங் குடலின் முதல் பகுதி மேல் நோக்கி ஏறும் பகுதி; இப்படி விதானம் வரை ஏறியபின் அடுத்து வலது புறம் வளைகிறது. வயிற்றின் ஒரு பக்கத்திலிருந்து மறு பக்கம் வரை இவ்வாறே நீண்டு, பிறகு நேரே கீழே இறங்குகிறது. மலப் பையாகவும் ஆசன வாயாகவும் முடிகிறது. இரைப்பையையும் சிறு குடலையும் போலவே மூன்று அடுக்கு வலுவான தசைகளால் உருவானது பெருங் குடல்.

மேல் நோக்கி ஏறும் பகுதியின் தொடக்கத்தில் உள்ளதுகுடல் வால் என்னும் 'அப்பெண்டிக்ஸ்'. ஒரு தடித்த விரலின் பருமனும் நீளமும் உள்ள இந்த வால் பொதுவாக எதிலும் ஒட்டாமல் தொங்கும். எப்போதாவது பெருங்குடல் தொடக்கப் பகுதியுடனோ வயிற்றின் உட்சுவருடனோ ஒட்டிக் கொண்டிருக்கும். குடல் வாலே இல்லாமல் அருமையாகப் பிறப்பவர்களும் உண்டு!

இந்தக் குடல் வாலின் பணி என்ன என்பதே புரியவில்லை. சில விலங்குகளில் இந்தக் குடல் வால்பகுதியிலும் உணவு ஜீரணப் பணி நிகழ்கிறது. மனித உடலிலோ இந்த உறுப்பு உருப்படியான பணி செய்வதாகத் தெரியவில்லை; பல சமயம் உபத்திரவமே புரிகிறது! அதிலே எப்போதாவது ஏதாவது அடைத்துக் கொண்டுவிட்டால் வீங்குகிறது. ரத்தத் தேக்கம் உண்டாகிச் சீழ் பிடிக்கிறது. குடல் வால் அழுகி, வீக்கம் உடைந்து சீழ் வயிற்றின் உள்ளே பரவிவிட்டால்தான் ஆபத்து. பிற உறுப்புக்களுக்குக் கெடுதல். குடல் வால் தொல்லை ஏற்பட்டால் தொப்புளுக்குக் கீழே சற்று வலது புறமோ பொறுக்க முடியாத வலி ஏற்படும். சிலருக்குச் சுரமும் வாந்தியும் கூட வரும். தொந்தரவு இன்னதுதான் என்று வைத்தியப் பரிசோதனையில் தெரிந்தவுடன் ஒரு சிறு ரண சிகிச்சை செய்து இந்த இடரைக் களைந்து விடுவார்கள்.

ஆரோக்கியமான குடல் ஆரோக்கிய வாழ்வுக்கு அடையாளம். தினசரி, குறிப்பிட்ட வேளையில் பிரயாசையின்றி இயல்பாக மலம் வெளியேறுவது ஓர் ஆரோக்கியப் பழக்கம். காலையிலோ, மாலையிலோ, பகலிலோ வசதியான வேளையில் மலம் வெளியேறப் பழக்கப்படுத்திக் கொள்ளலாம் என்றாலும் காலையில் வெளியேறுவதே சிறந்தது. பெருங்குடல் தன் பணியை முடித்ததும் வெளியேற்ற வேண்டிய சக்கையை 'ரெக்டம்' என்னும் மலப் பையில் நிரப்புகிறது. இந்தப் பை நிறைந்ததும் உணர்ச்சி பெறுகிறது. மலத்தை வெளியேற்ற விழைகிறது உடல்.

ஒழுங்காகவும் இயல்பாகவும் உணவின் கழிவுப் பொருள் வெளியேறவில்லை என்றால் சிக்கல்தான். மலச்சிக்கல் வேறு பல சிக்கல்களுக்கு அடையாளம், ஆரம்பம். அடிக்கடி மலச் சிக்கலால் அவதியுறுவோர் உணவில் நிறைய நீரைச் சேர்த்துக் கொண்டால் மலம் இளகி வெளியேற உதவும். கீரை, பழங்களை அதிகம் உண்பது நல்லது. பேதி மருந்து அடிக்கடி உட்கொண்டால் குடல் பலவீனமாகி விடலாம்.

சிறுகுடலில் வயிற்றுப் பூச்சிகள் சில இருப்பன போன்று பெருங்குடலிலும் அமீபாப் பூச்சிகள் சேரக் கூடும். இவை பெரும்பாலும் பெருங்குடலின் தொடக்கப் பகுதி

---

ஒரே இடத்தில் அமர்ந்திருந்து பணியாற்றுவோருக்கும் ஓடியாடி உடல்பயிற்சி பெற முடியாதவருக்கும் மலச் சிக்கல், மூல உபத்திரவம் போன்ற தொல்லைகள் வராதிருக்கச் சிறந்த உபாயம் சிரசாசனம். படத்தில் சிரசாசனம் பயில்பவர் உலகப் புகழ்பெற்ற வயலின் மேதை யெஹுதி மெனுஹின்.

# “அம்மா! விளக்கெண்ணெய் வேண்டாம்!

யிலும் முடிவுப் பகுதியிலும் அதிகம் காணும். இவையே பல குடல் புண்களுக்குக் காரணம், சீதபேதிக்குக் காரணம்.

உடலின் பல பகுதிகளில் வரக்கூடிய காசமும் புற்றுநோயும் பெருங்குடலையும் பாதிக்கலாம். காசம் எந்த வயதினருக்கும் வரும் என்றாலும் புற்றுநோய் பெரும்பாலும் நாற்பத்தைந்து வயதுக்கு மேற்பட்டவர்களையே பாதிக்கிறது. மருத்துவத்திலும் சிகிச்சை முறைகளிலும், ஆராய்ச்சியும் அனுபவமும் பெருகியுள்ள இப்போது, இந்நோய்களை ஆரம்ப காலத்திலேயே அறிந்து குணப்படுத்த முடிகிறது. அவசியமானால் நோய் முற்றிய குடல் பகுதியை வெட்டி எடுத்து விட்டு எஞ்சிய பகுதியை ஒட்ட வைத்துப் பெருங்குடல் பணியைத் தொடரும்படி செய்கிறார்கள். அடிக்கடி பேதியாவது, உடல் இளைப்பது, மலச் சிக்கலும் பேதியும் மாறி மாறி யிருப்பதெல்லாம் குடல் நோயின் அடையாளங்கள்.

குடலைப் பொறுத்த மற்றொரு தொல்லை 'குடல் ஏறுதல்.' திடீர் வயிற்றுவலியும் வயிற்று உப்புசமும், மலம் போகாமல் ரத்தம் மட்டும் கழிவதும் அடையாளங்கள். ஒரு குடல் மற்றொன்றுடனே, பெருங்குடலின் ஒரு பகுதி மற்றொன்றுடனே உள்ளே பின்னிப் பிசகிக்கொண்டு விடுவதே இந்த இடர். காரணமின்றிக்கூட இது நேரலாம். சிகிச்சை, தேர்ந்த மருத்துவர் உதவிதான்.

ஆசன வாயில் மலத்துடன் ரத்தம் போனால் காரணம் குடல் வியாதியாகவும் இருக்கலாம்; மூல உபத்திரவமாகவும் இருக்கலாம். குடலில் சதைவளர்வதாலோ புண்ஏற்பட்டதாலோ ரத்தப் போக்கு நேர்வதுண்டு.

மலப்பைப் பகுதியில் ரத்தக் குழாய்களில் தொல்லை ஏற்பட்டு அவை சுருங்கி வீங்கிக் கசிவதே மூலம். ஆரம்ப நாட்களில் இது உள்மூலம் என்று உடலுக்குள் தொல்லை விளைவித்துக் கொண்டிருக்கும். முற்றி விட்டால் வெளிமூலம் என்று ஆகி, மலம் கழியும்போது மலப்பையுடன் ரத்தக் குழாயும் ஆசன வாயின் வெளியே தொங்கும். வேதனை மிகும். மணிக்கணக்காக ஓரிடத்தில் நின்றோ அமர்ந்தோ பணி புரிய நேர்வதால் ரத்தஓட்டச் சீரமைப்பு பாதிக்கப்படுவதே மூலத் தொல்லைக்கு முக்கிய காரணம் என்று கருதப்படுகிறது. மூலத் தொல்லை உள்ளோருக்கு மலச் சிக்கல் பெருந்தொல்லை. பெருமுயற்சியுடன் மலம் கழித்தால் முன்னரே நைந்த ரத்தக் குழாய்கள் மேலும் நலியும்.

விளக்கெண்ணெய் சாப்பிடுவது நல்லதா? இது ஒரு பண்டையப் பழக்கம். உணவு முறையிலும் உணவுப் பொருள்களின் தரத்திலும் பக்குவ முறைகளிலும் சென்ற சில தலைமுறைகளில் பல மாறுதல்களைக் கண்ட பிறகு இன்றைய தலைமுறையினருடைய குடலுக்கு விளக்கெண்ணெய் தேவையில்லை. அவர்கள் குடலும் அதற்கு ஏற்றதாக இல்லை. அடிக்கடி விளக்கெண்ணெய் குடித்தால் குடல் உள்சுவர் அதை உறிஞ்சிக் கொண்டு பலவீனப்பட்டு விடும். நீடித்த மலச் சிக்கலுக்கோ, நாக்குப் பூச்சி இருக்கும்போதோ மட்டும் விளக்கெண்ணெயை அளவாகப் பயன்படுத்தலாம். உணவில் காரமும் புளியும் மிகையாகாமல் தடுப்பது குடலுக்கு ஆரோக்கியம். பெருங் குடலில் சிறு வியாதி வந்தாலே அது பெரிய தொந்தரவாகி விடலாம்.

மலப் பரீட்சை செய்து கொள்வது எளிய, அதிகச் செலவற்ற ஒரு மருத்துவ சோதனை. சீதம் இருக்கிறதா, சீழ் இருக்கிறதா என்றெல்லாம் பார்க்கும்போது நோய்களை அறியவும் அவற்றின் காரணங்களை ஊகிக்கவும் அவற்றுக்கான சிகிச்சைகளைத் தொடங்கவும் முடிகிறது. குடல்சம்பந்தமான வேறுசோதனைகளும் உண்டு. பேரியம் உட்கொள்ள வைத்து, அதன் பயணப் பாதையைப் படம் பிடித்துப் பார்த்தல், ஆசன வாய் வழியே எஃகுக் கருவியைச் செலுத்திக் குடலின் பொருளடக்க நிலை அறிதல் என்றெல்லாம் சோதனைகள் உள்ளன.

எந்தச் சோதனையிலும் காரணம் புலப்படாத சில குடல் வியாதிகளும் வயிற்றுப் போக்கும் உண்டு. இத்தகைய நோயாளிகளின் குறை உடலில் அல்ல, உள்ளத்தில் தான்! இவர்கள் எளிதில் உணர்ச்சிவசப்பட்டவர்களாகவும், எதையும் பெரிதாக எடுத்துக் கொள்ளும் இயல்பினராயும் இருப்பதால் இவர்களுடைய குடல் பாதிக்கப்படுகிறது என்கிறார்கள், நிபுணர்கள். அதிர்ச்சியான செய்தியோ கெட்ட செய்தியோ கேட்கும் போதும் இப்படி நேர்கிறது. வெளியே சொல்ல முடியாத மன வேதனை உள்ள பெண்கள் இத்தகைய குடல் இடருக்கு ஆளாவதுண்டு.

பரீட்சைக்குமுன் மாணவர்களின் வயிற்றுப் புரட்டலுக்கும் இதுவே காரணம்!

ஆலோசனை : டாக்டர் வ. தி அரசு

கட்டுரை : தம்பி சீனிவாசன்

“எதுக்கு என்னைத் தொந்தரவு படுத்தறே. அதான் விளக்கெண்ணெய் வேண்டாம்னு டாக்டரே சொல்லிட்டாரே!”



# பண்டிட் P.S. ராமசர்மாவின்

# சக்தி சஞ்சீவி

## குழந்தைகளின் ஈரல், குலைக்கட்டிகளுக்கு.

### எமது வைத்தியரின் மாதாந்திர சுற்றுப் பிரயாண விபரம் I

| ஊர் | தேதி | நேரம் | தங்கும் இடம் |
|---|---|---|---|
| தாராபுரம் | 1 | காலை 9-00 -- 10-00 | சாந்தா கிளினிக், சர்ச் ரோடு. |
| பழனி | 1 | காலை 11-00 -- 12-00 | ஜெயா மெடிகல் மார்ட் |
| உடுமலைப்பேட்டை | 1 | மாலை 3-00 -- 4-00 | ராஜேந்திரா அண்டு கோ., கடை வீதி |
| பொள்ளாச்சி | 1 | மாலை 5-00 -- 6-00 | தி எம்பயர் பார்மஸி. |
| பாலக்காடு | 2 | காலை 9-11 | K. H. பரசுராம், கல்தான்பேட்டை. |
| | 2 | மாலை 3 - 5 | Rainbow Quarters, Opp. Govt. Hospital. |
| கோயமுத்தூர் | 3 | காலை 9-11 | சீதாராம் லாட்ஜ், ஸ்டேட் பாங்க் ரோடு, |
| | 3 | மாலை 2 - 4 | ரெயில்வே ஸ்டேஷன் எதிர்புறம் |
| மேட்டுப்பாளையம் | 3 | மாலை 5-00 -- 6-00 | தி மேட்டுப் பாளையம் மெடிகல் ஸ்டோர்ஸ். |
| சத்தியமங்கலம் | 4 | காலை 8-00 -- 9-00 | C. R. K. மெடிகல்ஸ், கடைவீதி |
| கோபி | 4 | காலை 10-00 -- 11-00 | வாஸன் அண்டு கோ., கச்சேரி வீதி. |
| பவானி | 4 | மாலை 2-00 -- 3-00 | M. L. செட்டியார் அண்டு சன்ஸ், கடை வீதி. |
| மேட்டூர் அணை | 4 | மாலை 4-30 -- 5-30 | ஸ்ரீ ராமன் லாட்ஜ். |
| ஈரோடு | 5 | காலை 9-00 -- 11-00 | ஸ்ரீ கிருஷ்ணா டாக்கீஸ். |
| திருப்பூர் | 5 | மாலை 4-00 -- 5-30 | P. R. மணியம் ஸ்டோர்ஸ், பல்லடம் ரோடு. |
| திருச்சி | 6 | காலை 11-00 to மாலை 6-00 | திருச்சி ஆயுர்வேதிக் யூனியன், சின்னக் கடைத் தெரு. |
| தஞ்சாவூர் | 7 | காலை 7-00 -- 9-00 | Dr. S. வெங்கடராஜன் வைத்தியசாலை, சகாநாயக்கன் தெரு. |
| கும்பகோணம் | 7, 17, 27 | காலை 10-00 to மாலை 5-00 | ஸ்ரீ சக்தி விலாஸ வைத்தியசாலை பிராஞ்சு, 94, டவுன் ஹைஸ்கூல் ரோடு. |
| சீர்காழி | 8 | காலை 7-00 -- 8-00 | பிரம்ம வித்யா ஆயுர்வேத வைத்தியசாலை, ரயில்வே ஸ்டேஷன் ரோடு. |
| மாயூரம் | 8 | காலை 9-30 -- 12-00 | ஸ்ரீ வெங்கடேசா மெடிகல் ஹால், பட்டமங்கலம் தெரு. |
| நாகப்பட்டிணம் | 8 | மாலை 5-00 -- 6-00 | நாகை மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| திருவாரூர் | 9 | காலை 7-30 -- 9-00 | தன்வந்தரி மெடிகல் ஹால், 21, மடப்புரம் பாட்டை. |
| விஜயபுரம் | 9 | காலை 10-00 -- 11-00 | சகுந்தலா பார்மஸி, நாகை ரோடு. |
| திருத்துறைப்பூண்டி | 9 | மாலை 2-00 -- 3-30 | ஸ்ரீ T. V. சந்திரசேகரம் பிள்ளை, கடை வீதி. |
| பட்டுக்கோட்டை | 9 | மாலை 4-30 -- 6-30 | கோபால் விலாஸ், பெரிய தெரு. |
| புதுக்கோட்டை | 10 | காலை 8-00 -- 10-00 | நியூ லக்ஷ்மி டிஸ்பென்ஸரி, கீழ ராஜவீதி. |
| தேவகோட்டை | 10 | மாலை 2-30 -- 3-30 | ஸ்ரீ சோமசுந்தரம் மெடிகல் ஸ்டோர்ஸ், ஆர்ச் ரோடு. |
| காரைக்குடி | 10 | மாலை 4-30 -- 6-00 | நியூ கௌரி லாட்ஜ், மகர் நோம்பு அக்ரஹாரம். |
| சிவகெங்கை | 11 | காலை 8-30 -- 10-00 | கௌரி அண்டு கோ., கடை வீதி. |
| மதுரை | 11 | காலை 11-00-12-30 | T. N. சொக்கலிங்கம்பிள்ளை சன்ஸ், |
| ,, | 11 | மாலை 3-00- 6-00 | வடக்கு சித்திரை வீதி. |

குறிப்பு: பிரதி இங்கிலீஷ் மாதம் 10, 25 தேதிகளில் மாலை 3 முதல் 6 மணி வரை எமது வைத்தியர் மயூர வைத்தியசாலை, B-11, 1வது கிராஸ், தில்லைநகர், திருச்சி என்ற விலாசத்தில் முகாம் செய்கிறார்.

**ஸ்ரீ சக்தி விலாஸ வைத்தியசாலை,** கரூர் (போன்: 87)
திருச்சி ஜில்லா

# விண்ணும் மண்ணும்

கி.ராஜேந்திரன்

## 23 .ஹைஜாக் முயற்சி

இரு நாடுகளுக்கிடையே யுத்தம் என்று ஏற்பட்டால் சிப்பாய்களின் போராட்டம் பத்திரிகைகளிலும், டெலிவிஷனிலும், ரேடியோவிலும் அடிபட்டு உலகைப் பரபரப்பில் ஆழ்த்தும். ஆனால் போரின் போதும், அதற்கு முன்பும் பின்பும் நடக்கும் மற்றொரு போராட்டம் உண்டு. மிக முக்கியமான, பரபரப்பான ஆனால் உலகுக்குத் தெரியவராத இரகசிய யுத்தம் இது. பகை நாடுகளின் ஐந்தாம் படையினரிடையே நடைபெறும் கண்ணாமூச்சி விளையாட்டு. இவர்களில் ஒற்றர்கள், தேசத் துரோகிகள், கைக்கூலி பெற்று அடாத செயல்களில் இறங்குவோர் என்று பல ரகம் உண்டு. ஒருவரை ஒருவர் ஏய்த்துக் கண்ணில் மண்ணைத் தூவி விட்டுத் தப்பிக்கப் பார்ப்பார்கள். உண்மை அம்பலமாகிப் பிடிபட்டு விட்டாலோ போச்சு, மரண தண்டனை அல்லது குறைந்தபட்சமாக ஆயுள் தண்டனைதான் கிடைக்கும். இதைவிடச் சாவதே மேல் என்ற துணிவில் அவர்கள் உயிர் பிழைத்துத் தப்பவோ அல்லது பிராணனை விடவோ துணிவார்கள்.

இத்தகைய ஓர் எதிரும் புதிருமான நிலையில் — நெருக்கடியான கட்டத்தில் தான் தனஞ்செயனும், அவனை நியூயார்க்கில்கண்டுகொண்டு, விமானத்திலும் தொடர்ந்து வந்த பாகிஸ்தானியக் கைக்கூலிகளும் இப்போது இருந்தார்கள். பெண் குரல் ஒன்று 'வீல்' என்று சத்தமிட்டதைக் கேட்ட மறுகணமே தனஞ்செயன், தான் அதுவரையில் தன் மனத்துடன் உரையாடி உருவாக்கிய எண்ணங்கள் அனைத்தும் உண்மையாவதற்கான வாய்ப்புக்கள் இருப்பதை உணர்ந்தான். அதாவது சக்திவாய்ந்த விதத்தில் அந்த நீக்ரோக்களின் திட்டங்களுக்குத் தான் முட்டுக்கட்டை போட்டாலொழியத் தனது ஊகங்கள் அனைத்தும் மெய்யாகி விடும். அனுபமாவும் மைக்கேலும் இந்தியாவுக்கு வந்து உதவுவதை இவர்கள் தடுப்பதுடன் பாகிஸ்தானுக்கு இந்த இரு அபார மூளைகளையும் ஏற்றுமதி செய்தும் விடுவார்கள்!

மின்னல் வேகத்தில் தனஞ்செயன் செயல்படத் துடித்தான். ஆனால் துணிச்சலும் வேகமும் மட்டுமிருந்தால் போதாது. இந்தத் தொழிலில். அது தற்கொலையாக முடியும். நிதானித்து யோசிக்கவும் எதிரி எதிர்பாராதவிதமாகவும் இயங்கி வெற்றி பெறவும் வேண்டும்.

இதற்கிடையில் அந்த நீக்ரோவும் அரை நீக்ரோவும் விமானத்தினுள்ளே நடைபாதையில் குறுக்கும் நெடுக்குமாகச் சென்று, ''சொன்னபடி கேட்டால் ஓர் ஆபத்தும் விளையாது'' என்று பிரயாணிகளிடம் உத்தரவிடுகிற தோரணையில் கூறினார்கள். அவர்கள் அதிகம் பேசத் தேவையே இல்லாதவாறு அவர்கள் இருவர் கரங்களிலும் இருந்த பயங்கரமான மிஷின் கன்கள் கவனித்துக் கொண்டன. ஒரு தமிழ்ப் பண்டிதரின் வார்த்தைகளைக் கடன் வாங்கலாமென்றால் பிரயாணிகள் அனைவரும்



அடங்கி, நடுங்கி, ஒண்டி, ஒடுங்கி, ஒல்கி, ஒசிந்து போனார்கள்! டூரிஸ்ட் வகுப்புக்கும், முதல் வகுப்புக்கும் இடையே இருந்த திரையை விலக்கி, விமானத்தின் உட்புறத்தில் நீள ஒரு முனையிலிருந்து மறு முனை வரையில் பார்வையைச் செலுத்த, வசதி செய்து கொண்டார்கள் அந்த ஹைஜாக்கர்கள்.

அவர்களிடம் இவ்வளவு பெரிய துப்பாக்கிகள் — பயங்கரமான

மிஷின்கன்கள் — எப்படித் திடுமென்று வந்து சேர்ந்தன என்பதை ஊகிப்பதும் தனஞ்செயனுக்கு இப்போது கடினமாக இல்லை. மிகவும் சாமர்த்தியமாக எளிய தொரு வழியைப் பின்பற்றி அவர்கள் துப்பாக்கிகளை விமானத்தினுள் கொண்டு வந்திருக்கிறார்கள். 'இது முன்னாலேயே நமக்குத் தோன்றாமல் போயிற்றே! விமானத் தளப் பாதுகாப்பு அதிகாரியிடம் சொல்லி எச்சரித்திருக்கலாமே' என்று ஒரு கணம் வருந்தினான் தனஞ்செயன். ஆனால் உடனேயே அந்த எண்ணத்தை உதறித் தள்ளவும் செய்தான். எந்த ஒரு காரியமானாலும் நடந்து முடிந்த பிறகு 'அடடா! இவ்வளவுதானா?' என்று தோன்றுவது சகஜம். ஆனால் வழி சுலபமானதானாலும் அந்த யோசனை மூளையில் உதயமாவதுதான் கடினம். எனவே, சென்று போனதைப் பற்றிச் சிந்தியாமல் இனி மேற்கொண்டு என்ன செய்வது என்பது குறித்துத்தான் நினைக்க வேண்டும்.

திரை விலக்கப்பட்ட இடத்தில் — டூரிஸ்ட் வகுப்புக்கும் முதல் வகுப்புக்கும் இடைப்பட்ட விமானத்தின் மையப் பகுதியில் நின்று கொண்டு அரைக் கறுப்பன் முழங்கினான்: ''நியூயார்க்கிலிருந்து புறப்பட்ட இந்த விமானம் நேரே பாரிஸுக்கும், பின்னர் ஸூரிச், ரோம், கெய்ரோ மார்க்கமாக பம்பாய்க்கும் செல்ல வேண்டும். ஆனால் இது இப்போது நேரடியாக ராவல்பிண்டிக்குச் செல்லப் போகிறது. இதில் உங்களில் யாருக்கும் ஆட்சேபனை இராது என்று நம்புகிறேன். அப்படி இருந்தால் சொல்லுங்கள், எதிர்ப்புத் தெரிவிக்க இடமே இல்லாத உலகுக்கு உங்களை அனுப்பி வைக்கிறேன்!'' இப்படிக் கூறிவிட்டு ஜிம் கார்ட்டர் 'ஓகோகோ' வென்று பெரிதாகச் சிரித்தான். ''அந்த விதத்தில் நானும் கடவுளும் ஒன்று'' என்று சொல்லி அவன் மேலும் தொடர்ந்தான்: 'கடவுளுக்கு அவருடைய கட்டளைகளை மீறுபவர்களைக் கண்டால் பிடிக்காது; எனக்கும் அப்படித்தான்!' கார்ட்டரின் சிரிப்பு அலை அலையாக எழுந்தது.

நாமும் சிரிக்காவிட்டால் அவன் கோபம் அதிகமாகி விடுமோ என்று பயந்தவர்களாகச் சில பிரயாணிகள், அசடு வழியப் புன்னகை செய்தார்கள்.

''ஷட் அப், ஜிம்!'' என்றான் பால் ஸ்மித். கார்ட்டர் அவனை முறைத்துப் பார்த்துவிட்டு அடங்கினான்.

பயணிகளில் பலருக்கு ராவல்பிண்டி எங்கே, எந்த நாட்டில் இருக்கிறதென்பதுகூடத் தெரியாது. ஆனால் அதைக் கேட்டுத் தெளிவு பெற யாருக்குத் துணிச்சல் இருந்தது?

பால் ஸ்மித் — முழுக் கறுப்பன் கூறினான்: ''நான் இப்போது 'காக்பிட்'டுக்குள் சென்று விமான மோட்டியிடம் நேரே ராவல்பிண்டி செல்லுமாறு உத்தரவு பிறப்பித்து விட்டு வரப் போகிறேன். அந்தக் கோடியில் அமர்ந்திருக்கும் நாலு ஹோஸ்டஸ்கள் ஒரு ஸ்டூவர்டு ஆகியோர் உட்பட அனைவருக்குமாகச் சொல்கிறேன்: யாரும் இருக்கிற இடத்தை விட்டு அசையாதீர்கள்! ஆசனத்தை விட்டு உங்களில் யாராவது எழுந்தால் உடனே தலைகால் பாராமல் சுட்டுத் தள்ளுமாறு ஜிம்முக்கு உத்தரவிட்டிருக்கிறேன். பக்கத்தில் இருப்பவரையும் சேர்த்து இழுத்துக்கொண்டு சொர்க்க லோகப் பயணத்தைத் தொடங்கஆசை இருந்தாலொழிய யாரும் அசையாதீர்கள்! நாங்கள் எதற்கும் துணிந்தவர்கள்.''

விழிகளை உருட்டிச் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு அவன் மேலும் கூறினான்: ''ஒருவேளை நேரே ராவல்பிண்டி செல்ல விமானத்தில் எரிபொருள் காணாது என்றும் பாரிஸில் இறங்கி டாங்குகளை நிரப்பிக் கொண்டுதான் மேலே பயணத்தைத் தொடரவேண்டுமென்றும் விமான ஓட்டி தெரிவிக்கலாம். அவ்வாறாயின் கூடிய விரைவில் ரேடியோத் தொடர்பு கொண்டு பாரிஸ் ஆர்லே விமான நிலையத்தை எச்சரித்து வைக்கச் சொல்கிறேன். பயணிகள் யாரும் பாரிஸில் விமானத்தை விட்டு இறங்கக் கூடாது. விமானத்தின் கதவுகளைத் திறக்கப் போவதில்லை. போதிய எரிபொருளை நிரப்பியாகி விட்டது என்று விமான தள அதிகாரி ரேடியோ மூலம் கூறியதும் விமானம் மீண்டும் கிளம்பும். பாரிஸில் அதிகாரிகள் யாரும் எங்களிடம் வாலாட்ட மாட்டார்கள். இலேசாக அசைத்தாலும் இங்கே நூற்றுக் கணக்கான பயணிகள் பிணமாகி



விடுவார்கள்; இந்த விமானம் உங்கள் சவங்களுடன் சேர்ந்து பற்றி எரியும் போது ஆர்லே விமானத் தளம் சுடுகாடாக விளங்கும்; உங்கள் ஆவிகள் விமான தள அதிகாரிகளை அவர்களுடைய வாழ்நாளெல்லாம் சுற்றிச் சுற்றி வந்து சபிக்கும்! எனவே பாரிஸில் அதிகாரிகள் ஒத்துழைப்பார்கள். நீங்களும் தொந்தரவு தராமல் புத்திசாலித்தனமாக நடந்து கொள்ளுங்கள்!''

மாதா கோயிலில் சாவு மணி அடிப்பது போன்ற பயங்கர நிதானத்துடன் கணீரென்று ஒலித்தது அவன் குரல். மீண்டும் ஒரு முறை தெறித்து விழுவது போலிருந்த தன் விழிகளால் முரட்டுத்தனமாக அனைவரையும் ஒரு நோட்டம் பார்த்து விட்டு, எண்ணிக்கையில் குறைவான முதல் வகுப்புப் பயணிகளைக் கடந்து மேலே சென்று காக்பிட்டின் கதவைத் திறந்தான். துப்பாக்கியைத் தனக்கு முன்னால் நீட்டிய படியே உள்ளேபுகுந்தான், பால் ஸ்மித்.

**பா**ல் ஸ்மித் என்பதும் ஜிம் கார்ட்டர் என்பதும் அவர்களது இயற்பெயர்களாக இருக்க முடியாதென்றும் பொய்யான விலாசங்களைச் சொல்லி பாஸ்போர்ட்டுக்களைத் தயாரித்துக் கொண்டோ, ஏமாற்றிப் பெற்றுக் கொண்டோ வந்திருப்பார்கள் என்றும் தனஞ்செயன் நினைத்தான்.

ஜிம் கார்ட்டரை இங்கே விமானத்தின் மையத்தில் எல்லோரையும் நோட்டம் பார்க்க வசதியாக நிற்க வைத்து விட்டு பால் ஸ்மித் பைலட்டுடன் பேசக் காக்பிட்டுக்குள் நுழைந்தது ஒரு நல்ல வாய்ப்பாகத் தனஞ்செயனுக்குத் தோன்றியது. மிஷின் கன்கள் ஏந்தி நிற்கும் இருவரை ஒரே சமயத்தில் சமாளிப்பது கஷ்டம். ஆனால் ஒருவனது கவனம் வேறு திசையில் ஈர்க்கப் பட்டிருக்கும்போது மற்றொருவனுக்கு ஈடு கொடுப்பது ஒப்புநோக்குகையில் எளிது. இத்தனை பயணிகள் கொண்ட ஒரு பெரிய விமானத்தை ஹைஜாக் செய்து போக, ஆயுதம் தாங்கியிருந்தாலும் இரண்டு நபர்கள் போதாது. அதிகக் குண்டர்களுக்குக் கூலி தர விரும்பாத பாக் அரசின் கஞ்சத்தனமோ அல்லது அவர்கள் கொடுத்த, கொடுக்கவிருக்கிற பணத்தை அதிகம் பேர்களுடன் பகிர்ந்துகொள்ள விரும்பாத இவர்களுடைய பேராசையோ அல்லது இது விஷயம் அதிகம் பேருக்குத் தெரிய வேண்டாம் என்ற இரகசிய உணர்வோ எப்படியிருந்தாலும் ஹைஜாக்கர்களின் எண்ணிக்கை இரண்டுக்கு மேற்படாமல் இருப்பது ஓர் ஆறுதல்தான். 'கோழிக் குஞ்சைக் கொத்தப் பருந்து தானே வட்டமிடுகிறது; நல்லவேளை! ராஜாளி வரவில்லையே' என்று தாய்க் கோழி சமாதானம் அடைய முடியுமானால் தானும் சற்றுத் திருப்தி அடையலாம் என்று தனஞ்செயன் எண்ணிக் கொண்டான்.

பைலட்டுகளுக்குத் துப்பாக்கியுடன் வரும் பயங்கரவாதியைப் பார்த்ததும் ஏற்படப் போகும் அதிர்ச்சி படிப்படியாகக் குறைந்த பின் அவர்களுக்கு உத்தரவு பிறப்பித்து இயங்கச் செய்துவிட்டு பால் ஸ்மித் திரும்புமுன், தான் இங்கே காவல் இருக்கும் மற்றொருவன் மீது பாய்ந்து அவனைச் செயலிழக்கச் செய்ய முயலலாம். ஆனால் இதிலும் ஒரு சிறு ஏமாற்றம். விமான ஓட்டிகள் உள்ள 'காக்பிட்' அறையின் கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்றவன், கதவை இயல்பாகப் பழக்கத்தின் காரணமாக மூடியிருந்தானானால் எவ்வளவோ வசதி. ஆனால் அவன் முன்ஜாக்கிரதையாக அதைத் திறந்தபடியே வைத்துவிட்டுச் சென்றிருந்தான். இங்கு நடப்பவை அனைத்தும் அவனுக்கு விநாடி நேரத் தாமதமின்றித் தெரிந்து போகும். அங்கிருந்தபடியே திரும்பி யாரைத் தாக்குகிறோம் என்றுகூடப் பாராமல் தாறுமாறாகத் துப்பாக்கியை இயக்கக்கூடிய அரக்கன் அவன்.

பயணிகளுக்குக் காவல் இருந்த ஜிம் கார்ட்டர் பேசத் தொடங்கினான்: ''என் தோழன் இருக்கிறானே கொஞ்சம் விநோதமான பேர்வழி. நாளெல்லாம் சிரிப்பான்; ஆனால் காரியத்தில் இறங்கி விட்டால் சிடுசிடுக்க ஆரம்பித்து விடுவான். நான் இதற்கு நேர் விரோதம்! நாளெல்லாம் கடுகடுவென்று இருந்தாலும் துப்பாக்கியைத் தூக்கியதும் ஜோக் அடித்துச் சிரிக்க ஆரம்பித்து விடுவேன்! செய்கிற காரியத்தைச் சந்தோஷமாகச் சிரித்துக் கொண்டே செய்ய வேண்டும் என்ற கொள்கையை உடையவன்!''

ஒரே நிமிஷத்தில் ஆயிரக் கணக்கான தோட்டாக்களை வெளிப்படுத்திப் பிணக் குவியலை ஏற்படுத்தக் கூடிய சக்தி வாய்ந்த தனது 'மிஷின் கன்'னைத் தடவிக் கொடுத்தபடியே ஜிம் கார்ட்டர் சிரித்தான்.

'' உன் ஜோக்கைப் பாடையிலே வைக்க! உன் தலையில் இடி விழ!'' என்று தனஞ்செயன் முணுமுணுத்தது அவன் எதிரே யிருந்த அனுபமாவின் காதிலும் விழுந்தது என்பதற்கு அடையாளமாக அவள் உடலில் இலேசான அசைவு தெரிந்தது. ஆனால் அவள் திரும்பிப் பார்க்கவில்லை. அவள் மட்டு

## "கீதா"வின் நிகரற்ற பரிசுத் திட்டம்

**ஆயிரக்கணக்கான வாடிக்கையாளர்கள் பயனடையும் நல்லதோர் திட்டம்**

**அதிர்ஷ்டமும் – சேமிப்பும் ஒருங்கிணைந்த உன்னதமான திட்டம்**



## வர்ண ஜாலம்

வான வில்லின் வர்ண ஜாலம்
வஞ்சியரின் உடலில் தோன்ற
வண்ண வண்ண டிசைன்களில்
எண்ணற்ற ரகங்களில்
ஏற்றமிகும் ஜவுளிகளை
அள்ளி அள்ளி வழங்குகிறது கீதா.

தேவையானவற்றை தேர்ந்தெடுக்க
தனித்தனி மாடி உண்டு.

# கீதா

சில்க் &
சாரி பஜார்
31/32, N.S.B. ரோடு,
**திருச்சி-620002**

CROWN-G12

# FOUR AND A HALF MILLION PEOPLE READ THE WEEKLY...




*...NATURALLY!*

**It is Asia's finest illustrated magazine.**

**It gives you:**

* Current Topics. The Weekly helps you to keep pace with tomorrow: lively comment on topical subjects—political, social, economic, cultural.

* Communities. The Weekly helps you know your neighbours—their origins, customs, rituals, their problems and their achievements.

* General Features. The latest in books, films, music, theatre, painting, short-stories, humour and satire, a fun-filled page for children; jokes—new and stale; your Fortune from the Stars, and loads of other interesting material.

All written by experts, yet lively and readable.

All illustrated by the finest photographers, artists and cartoonists of the country.

**Make the Illustrated YOUR Weekly Habit**



**The Illustrated Weekly of India**

மென்ன, யார்தான் உடலை வளைக்கவோ, தலையை ஒடிக்கவோ துணிவார்கள்?

''ஏன், இந்தத் துப்பாக்கிகள் எங்கள் கைகளுக்கு வந்து சேர்ந்ததையே எடுத்துக்கொள்ளுங்களேன்'' என்று ஜிம் கார்ட்டர் தொடர்ந்து பேசினான். ''அதுவே ஒரு பெரிய ஜோக். விமானப் பாதுகாப்பை யெல்லாம் கடந்து எப்படி இவை எங்களிடம் வந்து சேர்ந்தன என்று ஆச்சரியப் படுகிறீர்கள் அல்லவா?'' என்று கேட்டுவிட்டு அவன் கிசுகிசு மூட்டப்பட்டவன் போல் சிரித்தான். அது ஓய்ந்ததும் அவன் குரல் மீண்டும் ஒலித்தது.

''விமான உபசரணைப் பெண்களுக்குச் சும்மா சம்பளம் தருவார்களா? எல்லாப் பயணிகளுக்கும் உணவு கொண்டு போய்த் தருவதுதானே அவர்களுக்கு முக்கிய வேலை? இதற்கெனப் பெரிய பெரிய டப்பாக்களில் நூற்றுக் கணக்கான பிளாஸ்டிக் தட்டுகள், கப்கள், சாஸர்கள், டம்ளர்கள் எல்லாம் வரும்! உணவு வகைகள் வேறு தனியாகப் பெரிய டப்பாக்களில் அழகாக அடுக்கப்பட்டு வந்து விமானத்தில் ஏறும். இந்தப் பெட்டிகளுள் ஒன்றின் அடிவாரத்தில் பெட்டிக்குள் பெட்டியாக ஓர் இரகசிய அமைப்புக்குள் இந்தத் துப்பாக்கிகள் இரண்டும் வைக்கப்பட்டன. மேலே தட்டுக்கள், டம்ளர்கள், கப்-ஸாஸர்கள் எல்லாம் அடுக்கப்பட்டன. குறிப்பிட்ட பெட்டியில் மட்டும் விஷயமறிந்த சிலர் தவிர மற்றவர் அறியாதவாறு சிறு சங்கேதக் குறியிடப்பட்டது. கென்னடி விமான தளத்தின் சமையலறையில் உள்ள எங்கள் நண்பன் அந்தக் குறியுள்ள பெட்டி இந்த விமானத்தில் ஏறுமாறு அனுப்பும் பொறுப்பை ஏற்றுக் கொண்டான். கச்சிதமாகத் தன் பொறுப்பை நிறைவேற்றியும் விட்டான்!'' இதைப் பெருமிதத்துடன் கூறி ஜிம் கார்ட்டர் மீண்டும் நகைத்தான்.

ஹைஜாக் அரக்கர்களின் கரங்களில் துப்பாக்கிகளைப் பார்த்த மறு கணமே அவை அங்கு எப்படி வந்து சேர்ந்தன என்று தான் ஊகித்தது சரியாகவே இருப்பதை எண்ணி விசனித்தான் தனஞ்செயன். இதனை விமானம் புறப்படுவதற்கு முன்பாகவே தான் ஊகித்திருக்கக் கூடுமானால்...? விமான உபசரணைப் பெண்கள் அதிகம் நடமாடும் இடத்துக்கு அருகில் தங்களுக்கு ஆசனங்கள் ஒதுக்கப்பட வேண்டும் என்று அவ்விருவரும் கேட்டது தன் காதில் விழுந்ததே, அப்போதே இந்தச் சூழ்ச்சியைத் தன் அறிவு அனுமானித்துப் பாதுகாப்பு அதிகாரிகளுக்கு அம்பலப் படுத்தியிருக்குமானால்...? அதையெல்லாம் இப்போது எண்ணி என்ன பயன்? 'சராசரி உல்லாசப் பயணிகள்போல் தான் நடந்து கொள்கிறார்கள்; விமான உபசரணைப் பெண்களைக் கிண்டல்செய்து விளையாடுவதற்காக அவர்கள் அருகே இடம் பிடிக்க விரும்புகிறார்கள்' என்றெல்லாம் தப்புக் கணக்குப் போட்டு ஏமாந்தாகி விட்டது. கென்னடி விமான தளத்தில், ஐந்து நட்சத்திர முத்திரை பெற்ற பிரும்மாண்டமான சொகுசு ஹோட்டலின் சமையல் கூடத்தைவிடப் பெரிதான உணவுத் தயாரிப்புப் பகுதிகளில் பாதுகாப்பு ஏற்பாடுகள் அத்தனை தீவிரமாக இல்லையோ, அல்லது இன்று ஒரு தினம் மட்டும்தான் சற்று அலட்சியமாக இருந்து விட்டார்களோ, எது என்று சொல்வதற்கில்லை. அவர்களும் தான் பாவம், என்ன செய்வார்கள்! முப்பத்தாறு சர்வதேச விமான நிறுவனங்கள் பயன்படுத்தும் விமான தளத்தில், ஒரு நாளைக்கு இருநூற்று அறுபது ராட்சத விமானங்கள் இறங்கவும், உயரக் கிளம்பிப் பறக்கவும் செய்கையில் ஒவ்வொரு விமானத்திலும் சராசரியில் இருநூறு பயணிகள் என்று குறைந்தபட்சமாகக் கணக்கிட்டால் கூட மொத்தத்தில் ஐம்பத்திரண்டாயிரம் பகல் உணவுகள் அல்லது இரவு உணவுகள் அல்லது காலைப் பலகாரங்களைத் தரம் குறையாது தயாரித்துப் பல்வேறு விமானங்களுக்கும் அனுப்ப வேண்டியிருக்கும்போது, தலை சுற்றத்தான் செய்யும்.

யோசனை... யோசனை... யோசனை...

■ பருப்பு வகைகளை வாங்கியவுடன் கொஞ்சம் விளக்கெண்ணெய் தடவி நன்றாகக் கலந்து டின்னில் காற்றுப் புகாமல் மூடி வைக்கவும். நெடுநாட்களுக்குப் பூச்சி வராமல் இருக்கும்.

■ கோதுமை வைத்த பாத்திரத்தில் ஒரு சிறு டப்பாவில் உப்பும் வேப்பிலையும் வைத்திருந்தால் கோதுமை கெட்டுப் போகாது.

■ ரிப்ரிஜிரேட்டரில் ஒரு தட்டில் கொஞ்சம் அடுப்புக் கரியை வைத்திருந்தால் ரெப்ரிஜிரேட்டரில் துர்நாற்றம் எதுவும் வராது.

■ குழந்தைகள் செருப்புக்குப் பாலிஷ் போடுமுன் கொஞ்சம் வெட்டிய உருளைக் கிழங்கைத் தேய்த்துப் பிறகு பாலிஷ் போட்டால் பிரமாதமாக இருக்கும்.

■ தலையணையில் துளசி இலைகளைப் பரப்பி படுத்துக் கொண்டால் தலையில் உள்ள பேன் போய்விடும்.

தகவல்: 'பாலி'

ஆதாரம்: மண்டே கிளப் 1974 ஆண்டு மலர்

யோசனை... யோசனை... யோசனை...

சமையல் கூடங்களில் பணியாற்றுவோர் பழக்கம் காரணமாகப் பதற்றமில்லாமல் இயங்கினாலும் காரியங்கள் துரிதமாக விளைடிப்போது தாமதமின்றி நடைபெற வேண்டும். இல்லாதபோனால் உலகின் ஏதாவது ஒரு திக்கில் பறந்து கொண்டிருக்கும் ஏதேனும் ஒரு விமானத்தில் பயணிகள் பட்டினி கிடந்து சபிக்க நேரிடும். இந்த வேகத்துக்கு ஈடு கொடுத்துச் செயல்பட்டபோது அங்கிருந்த ஒரு பாதுகாப்பு அதிகாரி ஏமாந்து விட்டிருக்கிறார். பெட்டி பெட்டியாகப் பல்வேறு விமானங்களுக்கு உணவு வகைகளும், பாத்திரத் தினுசுகளும் மளமளவென்று சென்று ஏறுகையில் எந்தப் பெட்டியை எவ்வளவு தூரம் அவர் ஆராய முடியும்? கென்னடி விமான தளத்தில் நூற்றுக் கணக்கான ஹைஜாக் முயற்சிகளை அதிகாரிகள் முறியடித்தாலும் என்றாவது ஒரு நாள் ஒரு சூழ்ச்சி பலித்துவிடுவதில் அதிசயமில்லை. யானைக்கும் அடி சறுக்குமல்லவா?

ஜிம் கார்ட்டர் கர்வத்துடன் தங்கள் திட்டம் வெற்றி பெற்ற விதத்தை விவரித்துக் கொண்டிருக்கையில் தனஞ்செயன் அதற்குத் தொடர்பாகச் சிந்தித்துக் கொண்டே செயலிலும் இறங்கி யிருந்தான்! தனது ஆசனத்துக்குக் கீழே இருந்த கைப் பெட்டியைக் காலால் மெல்ல மெல்ல அசைத்து முன்னுக்கு இழுத்துக் கொண்டான். இருந்த இடத்தை விட்டு அசையாமல் படிமானமாக இருந்த ப்ரீஃப்கேஸைக் கால்களாலேயே செங்குத்தாக எழும்பி நிற்கச் செய்தான். பின்னர் இடது கரத்தை மட்டும் கொஞ்சம் கொஞ்சமாகக் கால்களுக்கிடையில் கீழே இறக்கிப் பெட்டியின் கைப்பிடியைப் பற்றி அதனை மேலே தூக்கித் தொடைகளின் மீதாக வைத்துக் கொண்டான். நன்கு எண்ணெய் போடப்பட்டிருந்த பூட்டுக்கள் தொட்டதும் திறந்து கொண்டன. ஸ்பிரிங் செயல்படும் போது ஓசை எழாதிருக்க ஒவ்வொரு பூட்டுக்கும் இரு கரங்களையும் பயன்படுத்தினான். மூடியை இலேசாக உயரத் தூக்கி வலக்கரத்தை மணிக்கட்டு வரை உள்ளே நுழைத்துத் துழாவிய போது, மாதிரி காட்ட எடுத்து வந்த விசேஷ உலோகக் கலவை கொண்ட எஃகுக் குழாய்கள் சிறிதும் பெரிதுமாகப் பல்வேறு அளவுகளில் தட்டுப்பட்டன. அவற்றுள் பிடிமானத்துக்கு ஏற்றதான ஒன்றைச் சுற்றி, தனஞ்செயனின் விரல்கள் இறுகின.

எதிரே இருந்த அனுபமா, மைக்கேலின் ஆசனங்கள் தன்னை ஓரளவு மறைத்துப் பாதுகாப்புத் தந்தன என்றாலும் அதுவே ஒரு விதத்தில் விபரீதமாகவும் முடியலாம் என எண்ணினான் தனஞ்செயன். தனது அசைவுகள் சற்றுத் தொலைவில் இருக்கும் அந்த அரைக் கறுப்பனின் கண்ணில் பட்டுவிட்டால் குறி பார்க்கக்கூடத் தாமதியாமல் இந்தத் திசை நோக்கித் துப்பாக்கியிலிருந்து தோட்டாக்களைக் காலி செய்யத் தொடங்குவான். தனக்கு முன்னால் உள்ள இரண்டு அரும் பெரும் உயிர்களுக்கும் ஆபத்து. இதனால் ஹைஜாக் முயற்சியின் நோக்கமே பாதிக்கப்படும் என்பதைக் கூட அந்த முரடன் சிந்திக்க மாட்டான்.

எனவே, தான் முடியுமானால் இமைப் பொழுதைவிடக் கூடக் குறுகிய கால அளவில் செயலாற்ற வேண்டும்; குறி பிசகாமல் வெற்றிகரமாகவும் தாக்க வேண்டும்.

தனஞ்செயனின் இதயம் பெரிதாக அடித்துக் கொண்டு இரத்த ஓட்டத்தை அதிகரித்து, உடலின் இயக்கத் திறனுக்கு உதவியது. அவனது கண்கள் அசாதாரணமான ஒரு கொடூரப் பளபளப்புடன் அகன்று விரிந்தன. (தொடரும்)

## சென்னையில் குருவாயூர்

சென்னை நங்கை நல்லூரில் எட்டு வருடங்களுக்கு முன் தொடங்கப்பட்டது ஸ்ரீ குருவாயூரப்பன் ஆஸ்திக சமாஜம். ஏழரைக் கிரௌண்டில் ''ஸ்ரீ உத்தர குருவாயூரப்பன்'' ஆலயத்தை எழுப்பத் திட்டமிட்டுள்ளது. இந்த ஆலயம், மூல குருவாயூர் ஆலய அமைப்பில், அதைவிடச் சிறிய அளவில் அமைய உள்ளது. ஆலய நிர்மாணம் பற்றிப் பல விவரங்களை அறியும்பொருட்டு ஸ்ரீ விஷ்ணு நம்பூதிரியின் மூலம் அஷ்ட மங்கல ப்ரச்னம் சிறப்பாக நடைபெற்றது. அதன்படி இந்த உத்தர குருவாயூர் ஆலயம், குருவாயூரில் உள்ளதைப் போலவே விநாயகர், ஐயப்பன், பகவதி முதலிய சந்நிதிகளுடன் அமையவிருக்கிறது. நவக்கிரகங்கள், ஸ்ரீ பில்வமங்கள் ஆகியோருக்கும் சந்நிதிகளும் உருவாகவிருக்கின்றன. பில்வமங்கள சித்தர்தான் இவ்வழிபாட்டின் முன்னோடி.

இந்தத் திருக்கோயிலை அங்கத்தினர்களின் உடைமையான கோவிலாக எழுப்பி விரும்பதால் நாடு முழுவதும் அங்கத்தினர்களைச் சேர்த்து வருகிறார்கள். வருடச் சந்தா ரூபாய் ஒன்றும், நுழைவுக் கட்டணம் இருபத்தைந்து காசுகளும் கொடுத்து அங்கத்தினராவோரிடமிருந்துதான் கோவில் திருப்பணிக்கு நன்கொடை பெற்றுக் கொள்கிறார்கள். இந்தத் திருப்பணியில் ஈடுபட்டுப் பேருதவி புரிய வேண்டுமென அன்பர்களைக் கேட்டுக்கொள்கிறோம். சந்தா - நன்கொடைத் தொகைகளைக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்: ஸ்ரீ குருவாயூரப்பன் ஆஸ்திக சமாஜம், நெ. 5, ஏழாவது தெரு, ராம்நகர், நங்கை நல்லூர், சென்னை-61.

# மலர்களிலே அவள் மல்லிகை!




மலர்களின் ராணி, மல்லிகை!
இளமைப் பூங்காவில் பூரிப்புடன்
பூத்துக் குலுங்கும் இந்த
இளமங்கை, அழகு
ராணியாகத் திகழ்கிறாள். அந்த
புத்தெழில் என்றுமே நிலைத்திட
அவள் ஜெய் அழகு சாதன சோப்
உபயோகிக்கிறாள். மல்லிகை மணம்
வீசும் ஜெய் சோப் மேனியை
மிருதுவாக்கி, பொன்னொளி
வீசச் செய்கிறது.

மல்லிகை மணம் கமழும்

**ஜெய்**

அழகுசாதன
சோப்

டாடா தயாரிப்பு

OBM.7002 TM



"என்னுடைய ஊரையும் பெயரையும் நான் இங்கு சொல்லப் போவதில்லை. அவன் என்றே வைத்துக் கொள்ளலாம். உங்கள் வாழ்க்கையில் எத்தனையோ ஆயிரக் கணக்கான மனிதர்களைச் சந்தித்திருக்கிறீர்கள். அவர்களில் நானும் ஒருவன். ஒருசிலருக்கு அவர்களுடைய பிரதிபிம்பமாகக்கூட நான் தெரியலாம்.

இன்று முதல் தேதி. ஆமாம்! முதல் தேதி. முப்பது நாட்கள் உழைத்த உழைப்புக்குக் கூலியாக அச்சடித்த சில காகிதத் துண்டுகளைப் பெறப் போகும் உன்னதமான நாள்.

காலையில் சம்பளம் வாங்க காஷியர் அறைக்குப்போனேன். அநேகமாகச் சம்பளம் வாங்கப் போகும் முதல் ஆள் அன்று நானாகத்தான் இருக்கும் என்று நினைத்தேன். ஆனால் எனக்கு முன் பலர் அங்கே காத்திருந்தார்கள். என்னைவிட நெருக்கடி அவர்களுக்கு அதிகமோ? முந்நூற்றைம்பது ரூபாய்ச் சம்பளத்தில் அவர்கள் பிடித்துக் கொண்டது போக, இருநூற்றைம்பத்தைந்து ரூபாய்தான் கொடுத்தார்கள்.

அறை வாசலில் காத்திருந்தார் சக ஊழியர் ஒருவர். அவர் உறவினர் கல்யாணத்துக்கு நான் எப்போதோ



# அவன்



*அன்னம்*

# அவன் அவள் ஆண்டவன்!



கையெழுத்திட் டிருந்த ஐந்து ரூபாய்களை ஞாபகப்படுத்தி வாங்கிக் கொண்டார்.

கையில் தங்கியது இருநூற்றைம்பது ரூபாய். இருபத்தைந்து பத்து ரூபாய் நோட்டுக்கள். அவையும் புது நோட்டுக்கள் அல்ல. கசங்கிப் போய்ப் பலர் கைமாறிய அழுக்கு நோட்டுக்கள். தெருவில் இறங்கியவுடன் எனக்கு என் குழந்தைகள் ஞாபகம் வந்தது. பக்கத்துப் பங்களா வீட்டுப் பெண் சிவந்த ஆப்பிள் பழம் ஒன்றைக் கையில் வைத்துக் கடித்து உண்பதை ஆதங்கத்துடன் பார்த்துக் கொண்டு நிற்கும் என் பெண் சாந்தியின் முகம் கவனத்துக்கு வருகிறது. இன்று மூன்று குழந்தைகளுக்கும் ஆளுக்கு ஓர் ஆப்பிள் வாங்கிக் கொடுத்தால் என்ன? மூன்று ரூபாய்கள்தானே, போகட்டுமே!... மூன்று ரூபாய்களா? என் வலது கை என்னை யறியாமல் கழுத்தைத் தடவிக் கொண்டது. சலூன் பக்கம் போய் எப்போதோ இரண்டு மாதங்கள் முடிந்து விட்டன. பையன்கள் இரண்டு பேருக்கும், முடி காடு போல் மண்டிக் கிடந்தது. ஆப்பிள் ஆசையை மனத்திலிருந்து அகற்றியபடி வேகமாக நடந்தேன்.

நான் வேலை பார்க்கும் அலுவலகத்திலிருந்து கடற்கரை ரயில் நிலையம் ஒரு மைல். நான் இறங்க வேண்டிய ரயில் நிலையத்திலிருந்து என் வீடு இரண்டு மைல். நான் கொடுக்கும் நாற்பத்தைந்து ரூபாய் வாடகைக்கு நகருக்குப் பக்கத்தில் ஒரு திண்ணை கூடக் கிடைக்காது.

ரயில் நிலையத்திலிருந்து வீட்டுக்குப் போக என்னிடம் கொஞ்ச நாட்கள் முன்பு வரை ஒரு சைக்கிள் இருந்தது. என் தாத்தா காலத்தில் நாற்பது வருஷங்களுக்கு முன் வாங்கிய 'ராலே' தார் ரோட்டில் அம்பு போல் போகும். சாந்தியின் முதல் ஆண்டு விழாவை விமரிசையாகக் கொண்டாடினேன் — சைக்கிளை விற்றுத்தான்! அன்று முதல் நடை... நடையேதான்!

அதோ வந்து விட்டது என் திருமாளிகை. ஜன்னல் வழியாக உள்ளே நடப்பது இங்கிருந்தே தெரிகிறது. என் பிள்ளைகள் இருவரும் ஒருவரையொருவர் மோதிக் கொண்டிருந்தார்கள் — காளைகள் இரண்டு முட்டிக் கொள்வதைப் போல்.

''போடா, குரங்குக் குட்டி!...'' என்று ஒருவன் கத்தினான்.

''நீ மட்டும் என்ன? கழுதைக் குட்டி!''— இன்னொருவன் மட்டும் இளைத்தவனா?

''எருமை மாடு எருமை மாடு! பேசாதே!''

பெரியவனுடன் சரிசமமாக வாதாடச் சின்னவனால் முடியவில்லை. அதனால் அவனுக்கு அழுகை அழுகையாக வந்தது. பாய்ந்து போய்ப் பெரியவன் கையை 'வெடுக்' கென்று கடித்துவிட்டு ஓடி விட்டான். மற்றவனுக்கு நன்றாக வலித்திருக்க வேண்டும். ஆத்திரம் பீறிட்டுக் கொண்டு வந்தது. கீழே கிடந்த ஒரு சாயம் போன மர யானை — எப்போதோ அவர்கள் விளையாட வாங்கிக் கொடுத்தது. என்னைப் போலவே ஒரு காலத்தில் நன்றாக இருந்த பொம்மை. அதைக் குறி பார்த்து வீசி எறிந்தான். பையனின் கையில் நல்ல வேகம் இருந்தது. வளர்ந்த பிறகு அவன் தேர்ந்த 'பௌலர்'ராக வருவானோ என்னவோ!

சிறியவன் யானை வரும் வேகத்தைக் கண்டு சட்டென்று குனிந்து கொண்டான். அசதியுடன் வீட்டினுள் நுழைந்த என் நெற்றியை அது வேகமாகத் தாக்கியது. என் பொறுமை என்னை அறவே கைவிட்டு விட்டது. ஓடிக் கொண்டிருந்த சிறியவனை இடது கையால் ஓங்கி நான்கு கொடுத்தேன். வீட்டில் இருந்த பெரியவன் அலற அலற என் கை ஓயும் மட்டும் அறைந்தேன்.

என்னுடைய திருமாளிகையைச் சுற்றி என் பார்வை பாய்ந்தது. ஒரு சிறிய வராந்தா. அதையொட்டிப் பெரிய அறை — பன்னிரண்டுக்குப் பத்து. இதுதான் என் வரவேற்பு அறை, டிராயிங் ரூம், சயனக் கிரகம் எல்லாம். பின்னால் ஓர் ஓட்டுச் சார்பு போட்ட வராந்தா. இந்த ராஜ குடும்பத்துக்கு அறுசுவை உண்டி தயாராகும் 'கிச்சன்'. அறையின் ஒரு மூலையில் என் தாயார்

பஞ்சாட்சர ஜபம் செய்து கொண்டு உட்கார்ந்திருந்தான்.

''ஓம் நமசிவாய... சொன்னால் எது கேட்கிறேன் என்கிறதுகள்? ஒன்றை யொன்று வெட்டிச் சாய்த்துக் கொள்கிறதுகள்..... ஓம் நமசிவாய!''

என் சட்டையைக் கழற்றினேன் — டெரிலின் சட்டைதான். திங்களன்றும் வியாழனன்றும் கசக்கி உலர்த்தி அணிந்துகொள்ளும் ஒரே சட்டை. பையிலிருந்த பணத்தை அலமாரியில் வைத்தேன்.

வாசலில் அரவம் கேட்டது. வீட்டுக்காரரின் கணக்குப்பிள்ளை. எங்கள் காம்பவுண்டில் பதினாறு வீடுகள். இன்று காத்திருந்து அவர் பணம் வசூலித்துக் கொண்டுபோனால் தான் கணக்குப்பிள்ளைக்கு நாளைக்குச் சம்பளம். அவர் பெரிய சம்சாரி.

மின்சாரக் கட்டணம் ஐந்து ரூபாயைச் சேர்த்து ஐம்பது ரூபாயாகக் கொடுத்தேன். முன்பே போட்டு வைத்திருந்த ரசீதை அவர் கொடுத்தார். நான் உள்ளே திரும்புவதற்குள் பால்காரர். மொத்தம் ஆறு ஜீவன்கள். குடிக்க, தயிராக்க, மோராக்கத் தினம் ஒரு படி பால் இல்லாமல் முடிவதில்லை. என் தாயார் அதுகூடப் போதவில்லை என்று அலுத்துக் கொண்டாள். படி இரண்டே முக்கால் ரூபாய். அரை ரூபாய் தள்ளுபடி செய்து எண்பத்திரண்டு ரூபாய் வாங்கிப் போனார்.

கையில் பாக்கி நூற்றி இருபத்தெட்டு ரூபாய்கள். இதற்குள் என்னுடைய இதரச் செலவுகள் எல்லாவற்றையும் அடக்கிக் கொள்ள வேண்டும். இன்னும் முப்பது தினங்களுக்கு என் வாழ்க்கைப் பயணத்தைத் தொடர வேண்டும்.

ஆண்டவனே, ஆண்டவனே!

''எங்கேடா உன் அம்மா?'' என்று பையனைக் கேட்டேன்.

இருவரது அழுகையும் ஓயவில்லை. இருவரும் இப்போது ஒன்று சேர்ந்துவிட்டார்கள். அவர்களுடைய பொது எதிரி பெற்ற அப்பன் தான். அவர்கள் கண்களில் நான் இப்போது ஆசையுள்ள தகப்பனாகத் தெரியவில்லை. விரோதகன். என் கேள்விக்குப் பதில் சொன்னால் அவர்கள் கௌரவம் குறைந்து விடும். முகத்தைத் திருப்பிக்கொண்டு நின்றார்கள்.

என் அம்மா சொன்னாள்: — இப்போது 'நமசிவாய' முடிந்து விட்டது. சிந்தை முழுவதும் நிறைந்தவள் அவன் மருமகள் தான். ''யார் அவளைக் கேட்கிறது? மரியாதைக்கு ஒரு வார்த்தை சொல்கிறாளா? நாலு மணி அடித்தவுடன் சின்னப் பெண்ணை இடுப்பில் வைத்துக் கொண்டு புறப்பட்டுப் போனாள்... என்ன அவசரம்? யார் கண்டார்கள்? 'காலையில் போன குழந்தைகள் பசியோடு ஐந்து மணிக்குத் திரும்புமே' என்ற எண்ணம் இருந்தால்தானே? 'அதைக் கொண்டா, இதைக் கொண்டா' என்று என்னைப் பிய்த்துத் தின்கிறார்கள்'' என்றாள்.

நான் பதில் பேசவில்லை. கைகால்களைக் கழுவிக் கொண்டு ஈஸிச்சேரில் உட்கார்ந்தேன். அதில் இருந்த எண்ணெய்ப் பிசுக்கு உடையில் ஏறாமல் இருக்க ஒரு துண்டைப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தேன்.

அவள் வந்தாள். வேகமாக ஓடிவந்தாள். எங்கேயாவது ஏன் போக வேண்டும்? பிறகு ஏன் இப்படி அவசரப்பட வேண்டும்?

அவள் கேட்ட முதல் கேள்வி—''சம்பளம் வந்ததா?'' களைத்துப் போய் வந்தவனுக்குச் சாப்பிட ஏதாவது வேண்டுமா எனக் கேட்கத் தோன்றவில்லை... பணத்தின் மேல்தான் குறி.

''உம்... வந்தது!'' என்றேன் சுருக்கமாக.

''கொடுங்கள்! ஆண்டவன் பாதத்தில் வைத்துத் தருகிறேன்!'' என்றாள். அந்த ஆண்டவன் பாதத்தில் வைப்பதால் என் சம்பளம் இருநூற்று ஐம்பது ரூபாய்களும் இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய்களாக மாறப் போகின்றனவா? இல்லை, வீட்டுக்காரரும், பால்காரரும் 'அது ஆண்டவன் பணம், வேண்டாம்' என்று கூறப் போகிறார்களா? இரண்டும் இல்லை.

''நீ வருவதற்கு முன் கணக்குப்பிள்ளை ஸ்ரீநிவாசனும் பால்காரர் செந்திலும் வந்து பணம் வாங்கிக் கொண்டு போய்விட்டார்கள். அவர்கள்கூடக் கடவுள் பெயரைத்தான் வைத்துக் கொண்டிருக்கிறார்கள்!''

அவள் மௌனமானாள். ''பாவம், நம் ரவிக்கு இரண்டு சட்டைகளாவது தைக்க வேண்டும். பள்ளிக்கூடத்துக்குக் குழந்தை கிழிசல் சட்டை போட்டுக் கொண்டு போகிறான்.''

''அடுத்த மாதம்!'' என்றேன். எத்தனை நம்பிக்கை! அடுத்த மாதம் முதல் தேதி புதிதாக அதிர்ஷ்டம் என்னைத் தேடிக் கொண்டு வரப் போகிறதா?

''சாந்தி ஸ்லேட்டை உடைத்துவிட்டாள். ஒரு ரூபாய் வேண்டும்.''

''ஸ்லேட் கிடையாது. தரையில் எழுதச் சொல்!'' என்று சீறினேன்.

''இப்படிப் பேசினால் எப்படி?'' என்று அவள் அலுத்துக் கொண்டாள்.

''நான் வந்து ஒரு மணி நேரம் ஆகப் போகிறது. என்ன வேண்டும் என்று ஒரு வார்த்தை கேட்கத் தோன்றவில்லை. பட்டியல் மட்டும் பெரிதாக ஒப்பித்துக் கொண்டு போகிறாய்!''

''அரை மணி நேரம்... அதற்குள் நான் இலை போட்டு விடுவேன்!'' என்று உள்ளே திரும்பினாள் அவள்.

''இனிமேல்தான் சமைக்கவே போகிறாயா? ராணியாருக்கு அதற்குக் கூட நேரம் கிடைக்கவில்லையா?''

''எப்படியப்பா நேரம் இருக்கும் பக்கத்து வீடுகளில் இருந்து கண்ட கண்ட புத்தகங்கள் ஒரு மூட்டை வருகிறது. படிக்கிறாள், படிக்கிறாள். பரீட்சைக்குப் படிக்கிறதுபோல் அல்லவா படிக்கிறாள்? ... கொஞ்ச நஞ்சம் இருக்கிற நேரத்துக்கு வம்பு அளக்க ஒரு பட்டாளமே வருகிறது'' என்று கூறிப் பாடினாள் என் தாய்.

''அப்பப்பா! யாருடன் ஒரு வார்த்தை நான் பேசினாலும் உங்களுக்குப் பொறுக்காதே! நான்தான் வீட்டில் படிக்கிறேன், அரட்டை அடிக்கிறேன். பதினொரு மணிக்கு வெளியே போனால் ஐந்து மணிக்குத் திரும்புகிறீர்களே, என்னை ஏன் குறை சொல்ல வேண்டும்?'' என்று சாடினாள் என் மனைவி.

எனக்கு வயிற்றில் பசி; மனத்தில் ஆற்றாமை. கோபம் பொங்கிக்கொண்டு வந்தது.

''பெரியவர்களிடம் சரி சமமாக வார்த்தைக்கு வார்த்தை பேசாதே என்று எத்தனை தரம் சொல்லி யிருக்கிறேன்?'' — என் குரல் வேகமாக உயர்ந்தது. என் கை அவள் கன்னத்தில் பதிந்தது.

அவள் ஒரு கணம் நிலைகுலைந்து போனாள். என்னை ஏறிட்டுப் பார்த்தாள். கண்களிலிருந்து கண்ணீர் கன்னத்தில் கோலமாகப் பாய்ந்தது.

என் விழிகள் அந்தப் பார்வையைச் சந்திக்கக் கூசின. என் கை விரல்களின் அடையாளம் அவள் கன்னத்தில் தெரிந்தது. ஒட்டிப்போன கன்னங்கள், காய்ந்துபோன உதடுகள், வெளிறிப் போன கண்கள்—பன்னிரண்டு வருஷங்களுக்கு முன் — எங்கள் திருமணத்தின்போது அவள் அப்படியா இருந்தாள்? அன்று நான் கைப்பிடித்த அவள் வேறு, இவள் வேறு. அந்தக் கன்னங்களில் நான் எத்தனை பொலிவைக் கண்டிருக்கிறேன்? நான் அவைகளை எப்படியெல்லாம் வார்த்தைகளால் வடித்திருக்கிறேன்? அவளைத்தான் நான் இன்று அடித்துவிட்டேன்....

'ஆண்டவா! எங்களை ஏன் இப்படி வதைக்கிறாய்? எங்கள் இருவரையும் ஏன் ஒன்று சேர்த்தாய்? எங்கள் தலையில் ஏன் இந்தச் சுமையை ஏற்றுகிறாய்? தினமும் பலமுறை செத்துச் செத்துப் பிழைக்கிறேன். ஒரு புயலோ, ஒரு பூகம்பமோ வந்து எங்கள் எல்லோரையும் ஒரேயடியாகக் கொண்டு போ!'

அங்கு என்னால் நிற்கவே முடியவில்லை. சட்டையைப் போட்டுக் கொண்டு யாரிடமும் சொல்லாமல் வெளியே நடந்தேன்.

## அவன்

அவர் போய்விட்டார்.

'விரட்டியாகி விட்டதா? சுகப்படவா என் பிள்ளை ஜன்மம் எடுத்திருக்கிறான்? ஓர் இதமான பேச்சு உண்டா? வாய்க்கு ருசியான சாப்பாடுதான் உண்டா?''

என் மாமியார் சொற்களால் சாடியது எதுவும் என் காதுகளில் விழவில்லை. அவர் நல்லவர் தான். நான் வந்த புதிதில் எப்படி என்மேல் அன்பைப் பொழிந்தார்? இப்போது?

அவருக்கு வயதாகி விட்டது. உடலில் முன்பிருந்த தெம்பு இல்லை. சுற்றுப்புறத்தில் இன்னும் மேலான நிலையில் இருக்கிறவர்களைப் பார்க்கும்போது தம் பிள்ளையும் அப்படி வளரவில்லையே என்ற ஏக்கம் பாளை பிடிக்க வந்த என்னிடம் வெறுப்பாகப் பரிணமித்தது.

சமையலறைக்குப் போனேன். 'ஸ்டவ்' பற்றவைக்க கிரஸின் கிடையாது. சம்பளம் வந்த பிறகு வாங்க வேண்டும் என்று நினைத்திருந்தேன். இப்போதைக்குச் சுள்ளிகளைப் போட்டு எரித்து ரசம் வைத்தேன். அவருக்கு அது பிடிக்கும்.

குழந்தைகள் சாப்பிட வந்தார்கள். நடந்த நாடகத்தை யெல்லாம் அவர்களும் பார்த்

# அழகிய பெண்மணிகளுக்கு ஒரு அபூர்வமான புதுவித சோப்பு




மஹாராஷ்ட்ரா, தமிழ் நாடு, ஆந்திரப் பிரதேசம், கர்நாடகா
மற்றும் கேரளா மாநிலங்களில் கிடைக்கும்.

# லக்ஸ் ஸூப்ரீம்

## அதனுள்ளேயே அடங்கியுள்ளது ப்யூடி க்ரீம்

உங்கள் சருமத்தைப் பட்டுப்போன்று வழவழப்பாக வும், மிகுந்த அழகுடனும் விளங்க வைக்க லக்ஸ் ஸூப்ரீம் ஒரு புதிய சாதனமாகும். ஏனென்ருல் அது ஒன்றில்தான் ப்யூடி க்ரீம் அடங்கியுள்ளது.

நிறைந்த அதன் நுரையின் நடுவில் ப்யூடி க்ரீமின் ஸ்பரிசத்தை நீங்கள் உண்மையாகவே உணருவீர்கள்.

லக்ஸ் ஸூப்ரீமின் நுரை உங்கள் சருமத்திற்கு மென்மையூட்டும்போதே, உங்கள் தேகத்திலிருந்து அரிய ஒரு நறுமணம் வீசுவதை அனுபவிக்க முடியும். அதுதான் லக்ஸ் ஸூப்ரீமுக்கே உரித்தான ஒரு விசேஷ குணம்.

## லக்ஸ் ஸூப்ரீம் உபயோகித்து உங்கள் எழில் மலர்வதை உணருங்கள். ப்யூடி க்ரீம் அடங்கிய ஒரே சோப்பு

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமான தயாரிப்பு

துக்கொண்டுதானே இருந்தார்கள்? பாவம், சிறிசுகள்! என்ன செய்யும்?

''நீ அப்பா வந்தவுடன் பேசாதே அம்மா! காய் வுட்டுடு!... உன்னை அடிச்சாரில்லையா?'' என்று ஆறுதல் கூறினான் சின்னவன்.

''அப்படியெல்லாம் பேசக் கூடாது'' என்று அவனை நான் அதட்டினேன். அவர் முன்பெல்லாம் இப்படியா இருந்தார்.

ஒரு நாள்கூட வெறும் கையுடன் வர மாட்டாரே! ஒரு முழம் பூ... ஒரு பொட்டலம் பகோடா... ஏதாவது ஒன்று. எத்தனை நேர்த்தியான முகம்? அவர் பரந்த மார்பில் என் முகத்தைப் புதைத்துக் கொண்டு எத்தனை நாட்கள் என்னை மறந்திருக்கிறேன்!

இன்று... பாதித் தலை நரைத்து... பின்னால் வழுக்கை தெரிய... தோள்கள் சரிய... அப்பப்பா! நாற்பது வயதில் ஐம்பது வயதாகத் தெரிகிறார்.

எல்லோரும் உறங்கத் தொடங்கி விட்டார்கள். என் மாமியார்கூடத்தான். நான் மட்டும் சுவரில் சாய்ந்தபடி உட்கார்ந்தேன். எங்கே அலைகிறாரோ, கோபம் தணிந்து அவர் எப்போது திரும்புவாரோ?

என் மகள் சாந்தி சற்று முன் புத்தகத்தில் படித்தாள். ''ராவணன் என்ற அரக்கன் பல கொடுமைகளைச் செய்தான். சீதையைக் கவர்ந்து கொண்டு போனான்...''

''ஏன் அம்மா, ராவணன் என்றால் யார்? அப்பா மாதிரி இருப்பாரா?'' எனக் கேட்டாள் சாந்தி.

''இல்லையடி கண்ணே! உன் அப்பா நல்லவர். ரொம்ப நல்லவர். ஆனால்...'' நான் நிறுத்தினேன்.

இந்தப் பிஞ்சுக் குழந்தைக்குப் புரியும்படி நான் என்ன சொல்ல முடியும்?

''ஆண்டவா! உன் சந்நிதியைத் தினமும் சுற்றி வருகிறேனே! எங்கள் சிரமம் உன் கண்ணில் தெரியவில்லையா? கோபுரத்தில் குடிபுக ஆசை இருக்கிறது. குடிசைக்கு வரத் தைரியமில்லையா?''

## ஆண்டவன்

இரண்டு பேருமே என்னை அழைத்துவிட்டார்கள். இன்னும் நான் மௌனியாக இருந்தால் நான் இல்லை என்பதே நிலைத்து விடலாம். என்னைத் துதிக்கவா செய்கிறீர்கள்? இல்லை. ஒவ்வொரு கணமும் திட்டுகிறீர்கள். கல் என்று ஏசுகிறீர்கள். செவிடு என்று சாடுகிறீர்கள். குருடன் என்று கூசாமல் சொல்கிறீர்கள். கொஞ்சம் பொறுங்கள். இப்போது இரவு மணி பத்து. அந்த அவனையும் அவளையும் போய்ப் பார்ப்போமா?

ஒரே இருட்டு. அவன் வந்து சாப்பிட்டுப் படுத்தாகி விட்டது. எதுவுமே பேசாமல் மௌனமாக இலையில் அமர்ந்து உணவு அருந்தி விட்டுப் போய்விட்டான். அவன் பக்கத்தில் அவள் படுத்திருக்கிறாள். இருவரும் உறங்கவில்லை.

''ஏன்... என்மேல் கோபமா?'' — அவன் கேட்டான்.

''இல்லையே!'' என்றாள் அவள். கன்னத்தில் அடித்த தடம் இன்னும் மறையவில்லை. உள்ளத்தில் கோபம் இல்லையாம்.

''எனக்கு நல்ல பசி... அம்மா வேறு வெறி ஏற்றி விட்டாள்'' என்றான் சமாதானமாக.

''எனக்குத் தெரியாதா?... போகிறது விடுங்கள்...''

''ரொம்ப வலித்ததா?''

''இல்லை....''

''நீ பொய் சொல்கிறாய்!'' அவன் கைகள் அவள் கன்னத்தை வருடின.

''ஆமாம், நான் வரும்போது நீ எங்கே போயிருந்தாய்?'' — அன்புடன் கேட்டான்.

''டாக்டரிடம்... காலையில் சொல்லவில்லையா?''

''எதற்கு?''

''இதென்னகேள்வி? உங்களுக்குத் தெரியாதா? ஒன்றும் பயமில்லை என்கிறார். வெறும் ரத்தச் சோகை என்கிறார்.''

''நான் எங்கே போனேன் தெரியுமா?''

''இப்படிப் பெண்டாட்டியும் பிள்ளைகளும் வாய்த்திருக்கிறார்களே, என்று நொந்து கொண்டு ஊரைச் சுற்றி வந்திருப்பீர்கள்.''

''இல்லை. துணிக் கடைக்குப் போனேன். பெரியவனுக்குச் சட்டைத் துணி எடுத்து வந்து தைக்கக் கொடுத்தேன்... நாளைக்கு நீ போ... நல்லதா ஒரு புடவை வாங்கிக் கொள்.''

''எனக்கு எதற்கு இப்போது புடவை?''

''இனிமேல் தைக்க இடம் இல்லை. இப்படிக் கிழிந்து விட்டது. பேசாமல் போய் வாங்கி வா... அலை ஓய்ந்து சமுத்திரத்தில் குளிக்க முடியுமா? எதிர் நீச்சல் போட வேண்டியதுதான். எப்படியாவது சமாளிக்கலாம். ஒரு வாரத்தில் ஓவர்டைம் நூறு ரூபாய் வரும்..''

''ஒரு பழைய சைக்கிள் விலைக்குப் பார்த்து வைத்திருப்பதாகச் சொன்னீர்களே...''

''சைக்கிள் எதற்கு? நாற்பது வயதுக்கு மேலே தினமும் மூன்று மைல் நடந்தால் ரொம்ப நல்லதாம். அது நமக்கு இயல்பாக அமைந்திருக்கிறது. அதைப் போய் நாம் கெடுப்பானேன்?''

''காலையில் முதல் வேலையாக 'ஹேர் கட்' பண்ணிக் கொண்டு வாருங்கள். பின்னி விடலாம் போல் வளர்ந்திருக்கிறது.''

''ஏன், நீதான் பின்னி விடேன்!'' என்றான் அவன். அவள் கைகளை இழுத்துத் தன் கன்னங்களில் இழைத்தான்.

இப்போது சொல்லுங்கள். வாழ்க்கை இனிக்கிறதா, கசக்கிறதா? பூகம்பம், வெள்ளம், அழிவு — எந்த எண்ணமாவது வருகிறதா? இவர்கள் இப்போது சுவர்க்கத்தில் இருக்கிறார்கள். இரண்டு மனங்களும் ஆனந்த வெள்ளத்தில் ஒன்றாக நீந்துகின்றன.

இனியும் நாம் இங்கு நிற்பது விவேகமல்ல.

என் நிலைமை உங்களுக்குப் புரிகிறதா? இவர்கள் என் குழந்தைகள். காலையில் அடித்துக் கொள்வார்கள். மாலையில் சேர்ந்து கொள்ளுவார்கள்.

நான் பெரியவன். உங்களை விட மிகமிகப் பெரியவன். அனுபவம் உள்ளவன். கண்டும் காணாமல் கேட்டும் கேளாமல் — குருடனாக, செவிடனாக, கல்லாக நிற்க வேண்டியவன். இதைத்தான் நானும் செய்து கொண்டிருக்கிறேன். பின்ஏன் என்னைத் திட்டுகிறார்களாம்?

கதை: கௌசிகன்

சித்திரம்: சூர்யா..

# ஆசைகள் மடிவதில்லை
















சோமுவின் ஒரு கையில் டார்ச்... இன்னொரு கையில் துப்பாக்கி இருக்கும்... இருக்கட்டுமே. இதோ என் தாக்குதல்! அசந்து விட்டான் முனிசாமி. இதை நழுவ விடக் கூடாது.


விருத்தியடைந்த கால்களில், தன் உடல் பலத்தையெல்லாம் கொண்டு குவித்து முனிசாமியின் தாடையை நோக்கி ஓர் உதை கொடுத்தான் சதீஷ் வேகமாக.

திடீர்த் தாக்குதலால் நிலைகுலைந்து போன முனிசாமி சரிந்து சுழன்று பின்னால் விழ, அதே சமயம் டார்ச்சும் அணைந்து இருள் சூழ்கிறது.
ஐயோ..!
ஆ...!


முனிசாமியை உதைத்த வேகத்தில் சதீஷ் கட்டிலிலிருந்து உருண்டு கீழே விழுகிறான். தன்னை நோக்கிப் பாயும் துப்பாக்கிக் குண்டை எதிர் நோக்கிப் பரபரப்புடன் உருண்டு போகிறான்...


சோமு ஏன் இன்னும் சுடவில்லை? முனிசாமி என்ன ஆனான்? என் உதை அவனை நினைவிழக்கச் செய்து விட்டதா?.. அங்கே என்ன நடக்கிறது...?


...சத்தத்தையே காணோமே... டார்ச் கீழே விழுந்து உடைந்து விட்டதா? என் இருப்பிடத்தை ஊகிக்க என்னிடமிருந்து ஏற்படும் சிறு ஓசையை எதிர் பார்த்துக் காத்திருக்கிறானா சோமு? அடுத்து நான் செய்ய வேண்டியது என்ன?

# கதிரவன் உதிக்கும்...

அற்புதமான சிறிய நகரம் தாவண்கெரே. இந் நகரம் நந்திக் கடவுளின் உறைவிடமான மைசூர் மாநிலத்தில் பருத்திப் பயிராகும் பகுதியில் உள்ளது.

இங்கேதான் நாற்பது ஆண்டுகளுக்குமுன் காலம் சென்ற தர்மபிரவர்த்தா ராஜனஹல்லி ஹனுமாதப்பா தாவண்கெரே பருத்தி ஆலையைத் துவக்கினார்.

இன்று இந்த ஆலை மைசூர் மாநிலத்து ஆலைகளில் சிறந்த ஒன்றாக விளங்குகிறது. பாரதமெங்கும் விற்பனையாகும் தரம் மிகுந்த துணிவகைகளைத் தயாரித்து வெளிநாடுகளுக்கும் ஏற்றுமதி செய்கிறது. ஆயிரக்கணக்கான மக்களுக்கு ஊதியமுள்ள வேலை வாய்ப்பினையும் அளிக்கிறது.



**தாவண்கெரே** துணிவகைகள்

'தி தாவண்கெரே காட்டன் மில்ஸ் லிமிடெட்'
– பண்டைய மரபை இன்றைய வடிவாய்ப் படைக்குமிடம்!

Thomas/DCM/8d TM

**உடலில் ஊனம் ;**
**உள்ளத்தில் ஊக்கம்**

வீட்டில் உட்கார்ந்த வாறே வெளி உலகை இயன்ற வரை பார்த்துப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தான், வாலிபன் கபாலி. முழுப் பெயர் — கபாலீசுவரன்.

ஒன்றல்ல, இரண்டல்ல... பதினெட்டு வருஷங்கள் இப்படியே கரைந்துவிட்டன!

ஒரு நாள்.

கைகளை ஊன்றித் தவழ்ந்த நிலையில், ஜன்னலருகே வந்து உட்கார்ந்தபோது, வீதியில் ஒரு சைக்கிள் போவது தென்பட்டது. எத்தனையோ முறை பார்த்த காட்சிதான். ஆனால் இன்று என்னவோ சுழலும் சைக்கிள் சக்கரங்கள் கபாலியிடம் புதிய சிந்தனைகளைச் சுழல வைத்தன! மடமடவென்று பழைய அட்டைகளை யெல்லாம் ஒன்று சேர்த்து ஒரு 'டிசைன்' எழுதி வெட்டி இணைத்துப் பார்த்தார். 'இதுதான் நமக்கு உகந்தது. நமக்குப் பயன்படும் சைக்கிள்' என்ற முடிவுக்கு வந்து விட்டார் கபாலி.

இது நடந்தது 1961-ஆம் ஆண்டில்.

உட்கார்ந்தபடி கையால் சுழல வைத்து ஓட்டும் சைக்கிளை மூன்று சக்கரங்களுடன் கூடியதை முந்நூறு ரூபாயில் தயாரித்து விட்டார். பரீட்சார்த்தமாகத் தம் சைக்கிளைச் சென்னை நகரின் பல பகுதிகளுக்குச் செலுத்தி வீடு திரும்பி வந்தார். தம் முயற்சி வெற்றி பெற்றுவிட்டதுஎன்ற பெருமிதம் பொங்கியது!

''உங்களுக்கு உதவும் சைக்கிளைப் போல மற்றவர்களுக்காக எப்போது செய்யத் தொடங்கினீர்கள்?''

''ஒரு நாள் மாலை பொழுது போக்காக மாம்பலம் புறப்பட்டு, சைக்கிளில் வந்தேன். கோடம்பாக்கம் மேம்பாலத்தில் என்னையும் சைக்கிளையும் பார்த்த டாக்டர் சுரேந்திர தாஸ் என்னை நிறுத்தி விவரங்களைக் கேட்டார்....''

அந்த டாக்டர், அரிமா சங்க அங்கத்தினர். அவர் மூலம் அரிமா, ரோட்டரி சங்கங்களின் நன்கொடைகளாகச் சில ஊனமுற்ற ஏழை மக்களுக்குச் சைக்கிள்களை வாங்க விரும்பினார்கள். சைக்கிள் தேவைகளுக்குக்கோடம்பாக்கம் ஆத்ரேயபுரம் கபாலியின் முகவரி தேடி வர ஆரம்பித்தனர். மூன்று சக்கரச் சைக்கிள்களைத் தயாரிப்பது முழு நேர வேலையாகிவிட்டது கபாலிக்கு. தம் வீட்டிலேயே ஓர் அறையைத் தொழிற்கூடமாக்கிக் கொண்டார்.

ஒன்றரை வயதில் இளம் பிள்ளை வாதத்தால் இவரது இரு கால்களும் நடக்கும் சக்தியை இழந்து விட்டன.

கடம்பத்தூர் பள்ளி தலைமை ஆசிரியரின் ஆறுவது மகனாகப் பிறந்தும், எட்டாவது வகுப்புக்கு மேல் படிக்க முடியாமல் போய்விட்டது.

''இந்த விசேட மூன்று சக்கர சைக்கிள்களை இது வரை எத்தனை தயாரித்திருக்கிறீர்கள்? சைக்கிள் பாகங்களைச் சலுகை விலையில் பெற முடிகிறதா?''

''இதுவரை முப்பத்தாறு சைக்கிள்களைத் தயாரித்துக்

# மூன்று சக்கரங்களில் வாழ்க்கைச் சக்கரம்!

கொடுத்திருக்கிறேன். ஆர்டர்கள் கிடைத்த பிறகே தயாரிக்கிறேன். அவ்வப்போது சைக்கிள் பாகங்களை வாங்குவேன். தனிச் சலுகைகள் கிடையாது. சில பாகங்களை நானே வெல்டிங் செய்து கொள்கிறேன்.''

வெல்டிங் செய்ய ஆரம்பித்த பின் புதிய வேலைகளை மேற்கொண்டார். காஸ் ஸ்டவ்களுக்கு ஸ்டாண்டுகள் தயாரிக்கிறார். குடிசைமாற்று வாரியத்துக்காக 'சென்டரிங் ஷீட்'ஸ்களை வெல்டிங் செய்து அனுப்புகிறார்.

சென்ற பிப்ரவரி முதல் தேதியன்று ஒய். எம். சி. ஏ. யில் ஊனமுற்றோர்களுக்காக விளையாட்டுப் போட்டி நடத்தினார்கள். மூன்று சக்கர சைக்கிளில் உட்கார்ந்தபடியே ஈடுபடும் போட்டி. அதில் இவருக்கு ஏழு முதற் பரிசுகள் மயிலாப்பூர் அகாடமியின்



அன்பளிப்புக்கள். ஏழும், ஏழு விலையுயர்ந்த டார்ச் லைட்டுக்கள்!

கபாலி தம் தொழிலுக்கு உதவியாக இரண்டு பையன்களை வேலைக்கு வைத்திருக்கிறார்.

''உங்கள் வாழ்வில் ஏற்பட்ட ஒரு மகிழ்ச்சியான சம்பவத்தைச் சொல்லுங்கள்.''

''கூட்டணி மூலம் அண்ணாதுரை தேர்தலில் ஜெயித்ததும் தம் சகாக்களோடு போய் ராஜாஜி அவர்களை அவருடைய தெனரோஜிசாலை இல்லத்தில் சந்தித்தார் அல்லவா? அதே சமயத்தில் நானும் ராஜாஜி அவர்களைத் தரிசித்து ஒரு 'ஸ்வீட்' பாக்கெட்டைத் தந்து நமஸ்கரித்தேன். ராஜாஜி ஆசிர்வதித்து ஆப்பிள் பழம் தந்தார். அந்த நாள் வாழ்வில் மிக மகிழ்ச்சியான நாள்!''

கடும் உழைப்பாளியாக விளங்கும் இந்த முப்பத்திரண்டு வயதானவர், ''விலைவாசி உயர்வால் முன்னர் முந்நூறு ரூபாயில் செய்த மூன்று சக்கரச் சைக்கிள்களை இன்று உருவாக்க அறுநூறு ரூபாய்க்கு மேல் ஆகிறது'' என்கிறார்.

''என்போன்ற ஊனமுற்றோர் தன்னம்பிக்கையுடன் சிறு தொழில்களில் ஈடுபடும் போது அரசும் தேசிய மயமாக்கப்பட்ட பாங்குகளும் தயங்காமல் கடனுதவி செய்ய வேண்டும்'' என்றும் அவர் குறிப்பிட்டார்.

பேட்டி: **ஏ. சுவாமிநாதன்**

# பார்வைக்கு அழகான ஃபேன்கள் எல்லாம், வேலைத்திறனில் சிறப்பானது என்று ஒருபோதும் சொல்ல முடியாது–

புதிதாக வாங்கிய நாளன்று இருந்த புதுமைப் பளபளப்பு மங்காமலும், தொல்லையற்ற ஓட்டத்திறனை ஆண்டுக் கணக்கில் இழக்காமலும் இருக்கிறது உங்கள் ராலிஃபேன். ஏனெனில் ராலிஃபேன் மட்டுமே காலமெல்லாம் தொல்லையற்று ஓடவேண்டும் என்ற நோக்கில், சிறப்பான முறையில் டிஸைன் செய்யப்பட்டு, தயாராகி, கடுமையான பரிசோதனைகளுக்குப் பின்பே தொழிற்சாலையை விட்டு வெளிவருகிறது. மேலும் விசேஷ 'ஸ்டோவ் எனாமல்' முறை பெயிண்ட் பூச்சு காரணமாக அது அழகு மங்காமல் என்றும் புதுமைப் பொலிவுடன் இருக்கிறது. அதன் அழகிய அமைப்பைப் போலவே அதன் வேலைத்திறனும் சிறப்பானது என்பதற்குச் சான்றுகள் பல உண்டு: □ 'பிளேட் காண்ட்டூர்'களின் நூதனமான அமைப்பினால், பரந்த சுற்றளவிற்கு, சீரான காற்றோட்டம், அதிக வேகத்தில் கிடைக்கிறது. □ சரியாக நிலைப்படுத்தப்பட்ட 'ஸ்டாண்ட்' காரணமாக எந்தச் சாய்மானக் கோணத்திலும் சரளமான ஓட்டம் கிடைக்கிறது. □ பிளேடுகள் கச்சிதமாகச் சமநிலைப்படுத்தப் பட்டிருப்பதால் மோட்டார் நீண்டகாலம் உழைக்கிறது. □ சரியாக அமைக்கப்பட்ட அதன் ஆதாரம் எடையில் குறைந்தது; எனினும் வலுவானது. □ தேர்ந்தெடுக்க வசதியாக கவர்ச்சியான எழு 'டு-டோன்' வண்ணங்கள். சைஸ்கள்—டீலக்ஸ்: 400 மிமீ. மற்றும் 300 மிமீ. எலிகண்ட்: 400 மிமீ.

# அடடா, என்ன பொறுமை!

எது நடந்து விடுமோ என்று கோபி பயந்து கொண்டிருந்தானோ அது நடந்து விட்டது!

நன்றாக 'டிப்-டாப்'பாக டிரஸ் செய்து கொண்டு அவன் ஓர் இண்டர்வியூவுக்காகப் புறப்பட்டுக் கொண்டிருந்தான். ஒரு கம்பெனியில் 'ரிசப்ஷனிஸ்ட்' வேலைக்காக அவனை அழைத்திருந்தார்கள். அந்த வேலை மட்டும் கிடைத்துவிட்டால் மாதா மாதம் நூறு ரூபாய் அதிகமாகக் கிடைக்கும், இப்பொழுது வேலை பார்ப்பதில் கிடைக்கிற சம்பளத்தை விட !.... அப்புறம் இப்பொழுது செய்வது போல் ஒரே ஒரு டெரிகாட்டன் சட்டையையும், டெரிகாட்டன் பாண்டையும் தோய்த்துத் தோய்த்து இஸ்திரி போட்டு அணிந்து கொண்டு ஆபீஸ் போக வேண்டியிராது!

மனைவி மாலதியிடம் சொல்லிக் கொண்டு இரண்டடி எடுத்து வைத்திருக்கமாட்டான் கோபி !

அவன் எது நடந்துவிடும் என்று பயந்து கொண்டிருந்தானோ, அது நடந்துவிட்டது!

அவன் குழந்தை உஷா, ''அப்பா!.... அப்பா !'' என்று ஆசையாக அழைத்தபடி ஓடி வந்தாள்.

கோபி 'சட்'டென்று விலகுவதற்குள் அவன் மீது தாவி ஏறிவிட்டாள் குழந்தை.

'' சனியனே!.... இவ்வளவு நேரம் இல்லாதவன் நான் புறப்படுகிற நேரம் பார்த்து எங்கேயிருந்து வந்து தொலைச்சே !.... என் டிரஸ்ஸை எல்லாம் பாழாக்கப் பார்த்தியே!'' என்று வெறுப்புடன் கூறிவிட்டுக் குழந்தையின் முதுகில் 'பட் பட்' என்று அடி வைத்தான் கோபி.

குழந்தை 'ஓ'வென்று அழுதது. ஓடி வந்து அதைத் தூக்கி அணைத்தாள். அவள் கண்கள் கலங்கின.

சட்டையில் இலேசாகப் பட்டிருந்த தூசியைத் தட்டி விட்டு முணுமுணுத்துக் கொண்டே புறப்பட்டான் கோபி

இரண்டு நாட்களுக்கு முன்பு பெய்த மழையினால் பூமி இன்னும் காய்ந்தும் காயாமலும் சேறாகவே இருந்தது !

பஸ் ஸ்டாப்பில் தம் குடும்பத்தாருடன் நின்று கொண்டிருந்தார், தற்போது வேலை பார்த்து வரும் சிறிய கம்பெனியின் உரிமையாளர். கல்யாணத்துக்குச் சென்று விட்டு வருகிறார் போலிருக்கிறது ! கையில் சாத்துக்குடி போட்ட கலர் பேப்பர் பை.

''குட்மார்னிங் ஸார்!'' என்றான் கோபி.

'' அடடே, கோபி ! இங்கேதான் உன் வீடா ?'' என்று விசாரித்தார் மானேஜர்.

''ஆமாம், ஸார் !'' என்ற கோபி அவர் காலடியில் சிணுங்கிக் கொண்டிருந்த பெண் குழந்தையைப் பார்த்தான். அதற்கு மூன்று வயதுக்குள் இருக்கும். ஏனோ அது கண்ணைக் கசக்கிக் கொண்டு அழுதபடி யிருந்தது !

'' உங்கள் பெண்ணா சார் ?'' என்று கேட்ட கோபி குழந்தையைத் தூக்கினான் ! மானேஜரும் புரோப்ரைட்டருமானவரின் குழந்தையாயிற்றே அது! புதிய வேலை கிடைக்கிற வரை பழைய வேலையில் ஒட்டிக் கொண்டிருக்க வேண்டுமே !.... அல்லாமலும் அடுத்த மாதம் ஓர் இன்க்ரிமெண்ட் வர வேண்டியதிருக்கிறதே !

ஏற்கனவே சிணுங்கிக் கொண்டிருந்த குழந்தை முன்பின் தெரியாத கோபி தன்னைத் தூக்கியதும் கையையும் காலையும் உதைத்துக் கொண்டு அழத் தொடங்கிற்று. கான்வாஸ் ஷூவில் ஒட்டியிருந்த சேறு அவன் வெண்மையான சட்டையில் சின்னச் சின்ன பாதமாகப் பதிந்தது. அவனிடமிருந்து இறங்க அது திமிறின திமிறலில் அதன் வாயில் ஒட்டிக் கொண்டிருந்த சாக்லேட் துகள்கள் எல்லாம் வேறு அவன் சட்டையின் மீது படிந்தன !

அப்பொழுது மானேஜர் செல்ல வேண்டிய பஸ் வந்துவிடவே, அவர் மனைவிமக்களுடன் அதைப் பிடிக்க ஓடினார் !

சுகந்தி



மணிக்கூண்டைப் பார்த்தான் கோபி. இண்டர்வியூவுக்கு இன்னும் சில நிமிஷங்களே இருப்பதை உணர்த்திற்று அது. இனி பஸ் கிடைத்துச் செல்வதென்றால் நேரமாகி விடும். ஓர் ஆட்டோ ரிக்ஷாவைப் பிடித்துக் கொண்டு சென்றான் அவன்.

நல்ல வேளை. அவன் அந்தக் கம்பெனியை அடையவும் இண்டர்வியூ தொடங்கவும் சரியாக இருந்தது. நான்கைந்து பேர்கள்தான் வந்திருந்தார்கள். ஆண் ரிசப்ஷனிஸ்ட்தான் தேவை என்று விளம்பரம் செய்திருந்ததால் பெண்கள் எவரும் வரவில்லை. தன்னைத் தவிர மற்றவர்கள் எல்லாரும் நாகரிகமாக டிரஸ் செய்து கொண்டு வந்திருப்பதைக் கவனித்தான் கோபி.

இண்டர்வியூவில் கடைசி ஆள் கோபி தான். அவனுடைய சர்டிபிகேட்டுகளை எல்லாம்பார்த்துவிட்டு அவனைச்சீக்கிரம் வெளியே அனுப்பிவிட்டார்கள் பாவம்!.... அப்பொழுதுதான் அவன் தன் சட்டையையும் பாண்டையும் பார்த்தான்! மாலேஜர் குழந்தை தன் ஆடைகளை வீணாக்கியிருப்பது தெரிந்தது. ஆடைகள் அழுக்காகித் தன் தோற்றம் கவர்ச்சிகரமாக இல்லாததால் தனக்கு அநேகமாக அந்த வேலை கிடைக்காதென்று எண்ணினான் கோபி. குழந்தை உஷாவின் ஞாபகம் வந்தது. தான் அடித்த அடியின் வலி பொறுக்க முடியாமல் குழந்தை அலறிய அலறலும் துடித்த துடிப்பும் கண் கலங்க மாலதி குழந்தையைத் தூக்கிக் கொண்டு சென்றதும் அவன் மனக் கண் முன் தோன்றி அவன் மனச்சாட்சியை வாட்டின.

அப்படியே ரிசப்ஷன் ஹாலில் போட்டிருந்த சோபாக்கள் ஒன்றில் உட்கார்ந்தான் கோபி.

"கோபாலன் என்று பார்த்ததும் யாரோ என்று பார்த்தேன்டா பழி!.... நீயா?" என்று கேட்டபடி அவன் அருகில் வந்தான் அவன் நண்பன் சேஷாத்திரி.

"நான்தான்டா?.... நீ இங்கேயா இருக்கே?" என்று கேட்டான் கோபி.

"ஆமாம்! அட்வான்ஸ் கன்கிராஜுலேஷன்ஸ்!" என்றான் சேஷாத்திரி.

"எனக்கா?"

"ஆமாம்!"

"எதற்கு?"

"எதற்கா?.... உனக்கு ரிசப்ஷனிஸ்டாக செலக்ஷன் ஆகிவிட்டதடா கோபி! ஆர்டர் அண்டர் டைப்!" என்றான் சேஷாத்திரி கோபியின் கைகளைக் குலுக்கியபடி.

"ஆமாம், கோபி...! இண்டர்வியூ செய்த நான்கு டைரக்டர்களில் மூன்று பேர்கள் உன் சர்டிபிகேட்டுக்களையும் அனுபவ அத்தாட்சிகளையும் பார்த்துவிட்டு உன்னையே ரிசப்ஷனிஸ்ட்டாகத் தேர்ந்தெடுக்க விரும்பினார்கள். ஆனால் நீ 'நீட்டாக 'டிரஸ்' செய்து கொண்டு வராதது அவர்களுக்குப் பிடிக்கவில்லை. நான்காவதான டைரக்டர் வயதானவர். அவர் மானேஜிங் டைரக்டரும்கூட. 'ஒரு ரிசப்ஷனிஸ்ட்'டின் ஆடை அணிகள் சுத்தமாக இருக்க வேண்டும் என்று நீங்கள் சொல்வதை நானும் ஒப்புக்கொள்கிறேன்! ஆனால் அது மட்டும் ஒரு ரிசப்ஷனிஸ்டுக்குப் போதாது. எல்லோரிடமும் இதமாகவும் அன்பாகவும் எல்லாவற்றையும்விடப் பொறுமையாகவும் பழகத் தெரிந்திருக்க வேண்டும்! நாமெல்லாம் வீட்டில் சின்னக் குழந்தைகளிடமெல்லாம்கூட எரிந்து எரிந்து விழுகிறோம் அல்லவா பொறுமை இழந்து ...! மிஸ்டர் கோபாலனை அவருடைய குழந்தை அணைத்துக் கட்டி அவருடைய ஆடைகளைக் கசக்கி அழுக்காக்கியிருக்கிறது. அது தின்று கொண்டிருந்த சாக்லேட் துகள்கள் எல்லாம் அவர் சட்டையில் ஒட்டியிருந்தன. குழந்தையிடம் அதன் மனம் நோகாதபடி மிகவும் பொறுமையுடன் நடந்து கொண்டிருக்கிறார் மிஸ்டர் கோபாலன்!..... ஒரு குழந்தையிடம் அப்படிப் பொறுமை காட்டுகிறவரால் தான் பெரியவர்களிடமும் பொறுமை காட்டத் தெரியும்!.... ஒரு ரிசப்ஷனிஸ்ட்டுக்கு மிகவும் தேவையானது பொறுமைதான்!... அது மிஸ்டர் கோபாலனிடம் நிறைய இருப்பது தெரிந்தது....! அவரைச் சிறந்த ரிசப்ஷனிஸ்டாக நான் கருதுகிறேன்!" என்று அவர் சொன்னதும் மற்ற எல்லா டைரக்டர்களும் 'எஸ்' போட்டுவிட்டார்கள்!" என்றான் சேஷாத்திரி.

ஆர்டரை வாங்கிக் கொண்டு வீட்டுக்கு ஓடினான் கோபி...

"உஷா!.... உஷா!" என்று கூப்பிட்டுக் கொண்டே வீட்டினுள் ஓடின கோபி தரையில் முழங்கால்களை ஊன்றிக் கைகள் இரண்டையும் தரையில் பதித்துக் குனிந்து, "ஓடி வா, உஷா!.... அப்பா முதுகு யானை வாகனமாம்!.... ஏறிக்கோ!" என்றான்.

"மாட்டேன் போ! நீ அடிப்பே!" என்ற குழந்தை உஷா தன் முதுகுப்புறமாக இரண்டு கைகளையும் கொண்டு போய் முதுகைத் தொட்டுக் கொண்டபொழுது கோபியின் கண்கள் கலங்கிவிட்டன.

உடற்பிணி போக்கி, உயிர்காக்கும் உயர்-நற்பணியினை ஏற்றுள்ள

நல்லி தர்ம ஸ்தாபன வைத்தியசாலைக்கு (நெ. 96/2, R. H. ரோடு, லஸ் – மயிலாப்பூர், சென்னை)

## 15-3-74 சென்ற வெள்ளிக் கிழமையன்று 2-வது ஆண்டு ஆரம்பமாகி உள்ளது

சென்ற ஓராண்டு காலத்தில் சுமார் 20,000 நோயாளிகளுக்கு வெற்றிகரமாகச் சிகிச்சை யளித்து ஓர் அரிய சாதனையை நிகழ்த்தியுள்ளது. இம்மாபெரும் சாதனைக்குப் பெரிதும் ஒத்துழைப்பு அளித்த பொறுப்பு வகிக்கும் ஸ்தாபன டாக்டர்களுக்கும், உதவியாளர்களுக்கும் எமது உளங் கனிந்த நன்றி.

நல்லி தர்மஸ்தாபன நிர்வாகக் குழு அங்கத்தினர்கள், சென்னை-600017

விளம்பர உதவி: நல்லி சில்க்ஸ், 82, R. H. ரோடு, லஸ், மயிலாப்பூர், சென்னை-600004
(போன்: 74862)

---

11½% 12% 12½% 13%

11% ON FIXED DEPOSITS

With Public Ltd. Companies. Free Details as per Reserve Bank Directive will be supplied to the intending depositors on demand. Please contact

# BAJAJ CAPITAL

INVESTMENT CENTRE (P) LTD.

NEW DELHI-1

United India Life Bldg., F-Block Conn. Place
New Delhi. Phone 47832

---



பலத்திற்கும்
ஆரோக்கியத்திற்கும்

பண்டிட் D. கோபாலாசார்லுவின்

# ஜீவாம்ருதம்

1898 பிரசித்தி பெற்றது

ஆயுர்வேதாஸ்ரமம் (லிமிடெட்) சென்னை-17.








ஹோட்டல் அறை ஒன்றில் தூங்கிக் கொண்டிருந்த மனிதர் கதவு தட்டப்படும் சத்தம் கேட்டு எழுந்திருந்தார்.

''ஸார்! மன்னிக்கணும். உங்களைக் காலையில் எட்டு மணிக்கு எழுப்பச் சொன்னீர்களல்லவா?'' என்று மிகுந்த மரியாதையுடன் 'வெயிட்டர்' கேட்டார்.

''இல்லை! ஆறு மணிக்குத்தான் எழுப்பச் சொன்னேன். இப்போ மணி என்ன?'' என்று கேட்டார் அந்த மனிதர்.

''ஒன்பது!''

''அட கடவுளே!'' என்று பதறியபடி ஓடினார், அந்த மனிதர் குளிக்க!

மேற்படி நகைச்சுவைத் துணுக்கு நமக்குச் சிரிப்பை வரவழைக்காது, அதிசயமும் ஏற்படுத்தாது. ஏனெனில் இந்தியன் ஸ்டாண்டர்டு டைம் நமக்கு அத்துப்படி. ஆனால் அயல் நாட்டிலிருந்து இங்கு ஏராளமான உல்லாசப் பயணிகள் வந்து நமக்கு அந்நியச் செலாவணியை அள்ளித் தர வேண்டும் என்று ஆசைப்படுகிறோமே அவர்களுக்கு நமது இந்தியன் ஸ்டாண்டர்டு டைம் பற்றித் தெரியாது. மேற்படி துணுக்கில் கண்டது போல் நமது ஹோட்டல்கள் எதிலாவது நடக்குமானால் அவர்கள் நம் நாட்டின் மீதே அருவருப்பு அடைவார்கள். தங்கள் நண்பர்களிடமும் சொல்வார்கள். அப்புறம் நாம் அந்நியச் செலாவணி சம்பாதிப்பது எங்கே?

இப்படியெல்லாம் நேரக் கூடாது. அயல் நாட்டிலிருந்து வந்து இங்குள்ள பெரிய ஹோட்டல்களில் தங்கும் அயல் நாட்டுப் பயணிகள் மிகச் சிறந்த உபசாரத்தைப் பெற வேண்டும் என்ற நோக்கில் ஹோட்டல் பணியாளர்களுக்கென்று ஓர் இன்ஸ்டிட்யூட் நிறுவப்பட்டிருக்கிறது, சென்னையிலே.

அடையாற்றில் காடரிங் டெக்னாலஜி இன்ஸ்டிடியூட்டில் பி. யூ. ஸி. படித்தவர்களுக்கு மூன்று வருஷங்கள் ஹோட்டல் நிர்வாகத் துறையில் பயிற்சி தருகிறார்கள். வேறு எந்தக் கல்லூரியிலும் இடம் கிடைக்கவில்லையானால் இங்கே கொண்டு போய்ப் பிள்ளையைச் சேர்த்து விடலாம் என்று நினைப்போருக்கு ஒரு விஷயம்: இதில் சேர இந்த வருஷம் எண்ணூறு பேர் விண்ணப்பித்தார்கள்! நூறு பேருக்கு மட்டுமே இடம் கிடைத்தது! வருஷத்துக்கு எழுநூறு ரூபாய் சம்பளம்!

செலவு இத்தனை செய்தாலும் ஓர் அனுகூலமும் உண்டு. இதில் படிக்கிற பையன்களுக்கு விடுமுறையை வீணாக்காதிருக்கப் பெரிய ஹோட்டல்களில் வேலை வாங்கிக் கொடுத்து விடுகிறார்கள் இன்ஸ்டிட்யூட் நிர்வாகிகள். படிக்கிறபோதே வேலை செய்கிற வாய்ப்பு இவர்களுக்கு உண்டு! மூன்று மாதங்களுக்கு மாதம் நூறு, நூற்றைம்பது என்று கிடைத்தால் வசதிதானே?

மூன்று வருஷ டிப்ளமாப் பயிற்சி தவிர வேறு படிப்புகளும் உண்டு. எஸ். எஸ். எல். ஸி. தேறியவர்களுக்கு ஒரு வருஷம் உணவு, பழப் பாதுகாப்பு முறை பற்றிச் சொல்லித் தருகிறார்கள். பி. யூ. ஸி.யில் தோல்வியுற்றவர்கள்கூட இதில் சேரலாம். பேக்கரி, கன்பெக்ஷனரி போன்ற துறைகளில் பதினெட்டு வாரக் குறுகிய படிப்பும் இருக்கிறது. ஹோட்டல் வரவேற்புக் கலை, ஹோட்டல் கௌண்டர் சேவை போன்றவற்றுக்கும் பயிற்சி உண்டு! இல்லத்தரசிகளும் பதினெட்டு வாரங்கள் தொடர்ந்து ஓய்வு நேரத்தில் படித்துச் சமையல் கலை பேக்கரி, கன்பெக்ஷனரி போன்றவை கற்கலாம்.

பதினாறு லட்சம் ரூபாய் செலவில் தொடங்கப் பெற்று இந்தியாவிலேயே சொந்தக் கட்டடத்தில் இயங்கும் முதல் 'காடரிங் இன்ஸ்டிட்யூட்' இது. இந்த நிறுவனத்துக்கு மூன்றரை லட்சம் மதிப்புள்ள நவீன சமையல் சாதனங்களையும் அக்கரைச் சீமைக்குச் சென்று பயிற்சி பெற ஒரு லட்ச ரூபாய் ஸ்காலர்ஷிப்பும் ஆஸ்திரேலியா நன்கொடையாக வழங்கியுள்ளது.

இந்தக் 'காட்டரிங்' இன்ஸ்டிட்யூட்டின் மாணவர் தலைவர் கே. ரவியைச் சந்திக்கிறோம். அவர் சொல்லுகிறார்:

''இந்தியாவில் உள்ள எல்லா ராஜ்யங்களிலும் எங்கள் கல்லூரியில் பயில மாணவ மாணவியர் வந்திருக்கிறார்கள். ஏன், காஷ்மீர், சிங்கப்பூர், இலங்கையிலிருந்தும் வந்து சேர்ந்திருக்கிறார்கள். நாங்கள் இங்கு பயிற்சி பெறுவது தவிர நேரிடையாக ஹோட்டல் கலையில் ஈடுபட வாய்ப்பு உண்டு. அயல் நாட்டிலிருந்து வரும் விருந்தினர் விருந்துகளுக்கும் வருஷா வருஷம் கவர்னர் அளிக்கும் சுதந்திர, குடியரசு தின, தேநீர் விருந்து

# ஏமாற்றம் நீங்கட்டும் எட்டிக்காய் இனிக்கட்டும்!



சென்ற 1973ம் ஆண்டு நடந்திருக்க வேண்டிய திரு திரவியத்தின் கல்கி நினைவு அறக்கட்டளை சொற்பொழிவுகள் பல்வேறு காரணங்களால் ஒத்திப் போடப்பட்டு, இந்த ஆண்டு பிப்ரவரி இறுதியில் நடைபெற்றது. அவர் சொற்பொழிவுகளின் நினைவு மாறு முன்னரேயே இந்த ஆண்டின் சொற்பொழிவுகளைத் திரு சோம. லெ. மார்ச்சு இரண்டாம் வாரத்தில் நடத்தினார்.

திரு சோம. லெ. தமது உரைகளை எழுதி வாசிக்காமல், கையில் குறிப்புக்கள் வைத்துக்கொண்டு மேம்போக்காகச் சில செய்திகளைச் சொல்வதோடு நிறுத்திக்கொண்டார்.

அவருக்கு வழங்கப்பட்ட தலைப்பு ''பத்தொன்பது, இருபதாம் நூற்றாண்டைய பத்திரிகைகளும், தமிழும்'' என்பதாகும். முதல் இரண்டு நாள் சொற்பொழிவுகளிலும் சமீப காலத்திய நாளிதழ்கள் வார இதழ்கள் ஆகியவை பற்றியும், அவற்றின் ஆசிரியர்கள் பற்றியுமே எடுத்துரைத்தார். இந்த விவரங்கள் யாவரும் அறிந்த விஷயங்களாய் இருந்தமையால் சுவைக்கவில்லை. மூன்றும் நாள்தான் சிறிது பத்தொன்பதாம் நூற்றாண்டில் வெளியான சஞ்சிகைகளைப் பற்றிக் குறிப்பிட்டார். அதுவும் அட்டவணை அளிப்பது போல் அமைந்திருந்தாரே யொழியத் தமிழில் எந்த எந்தத் துறை இலக்கியங்களை வளர்க்க அப்பத்திரிகைகள் உதவின என்ற ஆராய்ச்சி பூர்வமான கருத்துக்கள் சொற்பொழிவில் இடம் பெறவில்லை.

திரு சோம. லெ. அவர்கள், வழங்கப்பட்ட தலைப்புக்கும், பொருளுக்கும் நீதி வழங்க முடியாதவர் அல்ல. ஆழ்ந்த அறிவும் முயற்சியும் உடையவர். பல அருமையான ஆராய்ச்சி நூல்களை எழுதி வெளியிட்டுள்ளவர். ஆகவே, அவர் சொற்பொழிவில் இதுவரையில் நாம் கேட்டறியாத பல தகவல்களைப் பெறலாம் என்று எண்ணியிருந்தவர்களுக்கு ஏமாற்றமாகவே இருந்தது.

''பத்திரிகைகளும் தமிழும்'' என்று தலைப்புக் கொடுக்கப்பட்டிருக்கும்போது அதற்ேற்பச் சென்ற நூற்றாண்டிலும் இந்த நூற்றாண்டிலும் தமிழ் பல்வேறு துறைகளில் வளமும் வலிமையும் பெறத் தமிழ் ஏடுகள் எந்த அளவுக்கு உதவியுள்ளன என்ற விவரங்களை ஆராய்ந்து பார்த்து வெளியிட்டிருந்தாரானால் மிகவும் சிறப்பாயிருந்திருக்கும். தமிழில் எந்தத் துறை பற்றியும் எழுதலாம், புரியும்படி எழுதலாம் என்ற நிலை இன்று உருவாகியிருப்பதற்கு முக்கிய காரணம் தமிழ்ப் பத்திரிகைகளே. தமிழ் நடை எந்த விதமாகப் படிப்படியாக மாறுதல் அடைந்து வந்திருக்கிறது என்பதை மட்டுமின்றி விஞ்ஞானம், பொருளாதாரம், அரசியல், தேசியம், மனிதாபிமானம், பல்வேறு கலைகள், நகைச்சுவை, இலக்கியம் போன்ற துறைகளைப் பற்றித் தமிழ் ஏடுகளில் எழுதப்பட்டதால் தமிழ் எந்த அளவுக்கு ஆற்றலும் வலிமையும் பெற்றுள்ளது என்பதையும் விரிவாக அவர் விளக்கியிருக்கலாம்.

திரு சோம. லெ. அவர்கள் சேகரித்துள்ள குறிப்புக்கள் நூல் வடிவம் பெறும்போது மேற்கூறிய முறையில் அவர் சிந்தித்துச் செயலாற்றினால் பயனுள்ள பணியாக இருக்கும்.

பல்கலைக் கழகம் இது போன்ற சொற்பொழிவுகளைத் தயாரிக்குமாறு அறிஞர்களைக் கேட்டுக் கொள்ளும்போது தலைப்பைத் தருவதோடு மட்டும் நில்லாது அந்தத் தலைப்பின் அடிப்படையில் எந்த விதமாக ஆராய்ச்சியை நடத்தலாம் என்பதற்கு வழிகாட்டுவது போல் சில வரிகளையும் சொற்பொழிவாளருக்கு எழுதி அனுப்புதல் நலம். **-எஸ். வி. எஸ்.**

---

களுக்கும் ஏற்பாடுகளைக் கவனிப்பது நாங்கள்தான்.''

''டிப்ளமா பெற்ற மாணவர்களுக்கு வேலை வாய்ப்பு எப்படி உள்ளது?'' என்று நிர்வாக அதிகாரி ராஜனை வினவுகிறோம்.

''கன்னிமாரா, ஸவேரா, ஸ்பென்ஸர் முதலிய ஹோட்டல்களில் எங்கள் இன்ஸ்டிட்டியூட்டில் தேறிய மாணவர்கள் உதவி மானேஜராக, மேற்பார்வையாளராகப் பணி புரிகிறார்கள். இந்திய சுற்றுலா அபிவிருத்திக் கழகத்திலும் வேலையில் இருக்கிறார்கள்.''

''நாங்கள் மாணவர்களுக்குத்தான் பயிற்சி அளிக்கிறோம் என்பதில்லை. பெரிய பெரிய ஹோட்டல்களான ஸ்பென்ஸர், ஸவேராவில் பணி புரிபவர்களுக்கு அங்கேயே மாலையில் வகுப்புக்களை நடத்திப் பயிற்சி அளிக்கிறோம்!'' என்கிறார் ஆசிரியர் டி. டி. ஜார்ஜ்.

இந்தக் கல்லூரியின் ஆரம்ப நாளிலிருந்து முதல்வராக இருந்து கண்ணும் கருத்துமாக நிர்வகித்து வருபவர் ஏ. வி. குப்புசாமி.

சமையல் கலையை ஐ. வி. எஸ். என்று சொல்லிக் கேலி செய்தது போக உண்மையாகவே தற்போது சமையல், ஹோட்டல் நிர்வாகக் கலையில் விசேஷத் தேர்ச்சி பெற ஆசிரியர்களும் மாணவர்களும் அக்கரைச் சீமைகளுக்குச் சென்று வருகிறார்கள். **-பி. எஸ். மணி**

# மைக்ரோஃபைன்ட்

# ஆஸ்ப்ரோ

## அதிவேகமாகக் கரைந்து, அதிவேகமாகக் கிரகிக்கப் படுகிறது. அதனுல்தான் அது அதிவேகமாக வலியைப் போக்கி விடுகிறது–

சாதாரண வலிநிவாரண மாத்திரைகளைவிட இருமடங்கு அதிக வேகத்துடன் வலியைப் போக்கி விடுகிறது.









சாதாரண மாத்திரைகளைப் போலன்றி, ஆஸ்ப்ரோவின் நுண்ணிய அணுக்கூறுகள் அதிவேகமாகக் கிரகிக்கப் படுகின்றன. வலியின் இருப்பிடத்தை அதிவேகமாக அடைகின்றன. உங்களுக்கு அதிவேக நிவாரணம் அளிக்கின்றன.

கீழ்க்கண்டவைகளுக்கு மைக்ரோ:.பைன்ட் ஆஸ்ப்ரோ சாப்பிடுங்கள்: தலைவலி • உடல் வலி • ஜலதோஷம் • :.ப்ளு • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி

சாப்பிடும் அளவு: வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள், தேவைப் பட்டால் மீண்டும் சாப்பிடவும். குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொற்படி

**ஆஸ்ப்ரோ** மட்டுமே மைக்ரோ:.பைன் செய்யப் படுகிறது, அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக.

நிகோலஸ் (N) தயாரிப்பு

A G 57 TM

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam

# எஃகு நகரம்
# ஒரு பூஞ்சோலை நகரமாகவும் ஆக முடியுமா?

இந்தியாவின் எஃகு நகரமான ஜாம்ஷெட்பூர் ஒரு முன்மாதிரி நகரமாகத் திகழவேண்டும் என்றே திட்டமிடப்பட்டிருந்தது.

''நிழல் தரும் மரங்களைக் கொண்ட, அகன்ற தெருக்களாக அமைத்திட மறந்திட வேண்டாம். ஒன்று விட்டு ஒன்று, துரிதமாக வளர்ந்திடும் வகை மரங்களை நடவும். புல்வெளிகளுக்கும் பூங்காக்களுக்கும் போதிய வசதி செய்திடவும்.''—என்று ஜாம்ஷெட்ஜி டாடா தனது மகன் தோராப்புக்கு எழுதியிருந்தார்.

இன்று ஜாம்ஷெட்பூர் அவ்வண்ணமே உள்ளது—எஃகு நகரத்தோடு ஒரு பூஞ்சோலை நகரமாகவும் பரிமளிக்கிறது.

குடியிருப்பு வீடுகள் கூட, எழுபது ஆண்டுகளுக்கு முன்னர் ஜாம்ஷெட்ஜி வெளியிட்ட விருப்பங்களை நினைவில் நிறுத்தி, திட்டமிட்டு அமைக்கப் பட்டிருப்பதோடல்லாமல், இன்னும் விரிவுபடுத்தப்பட்டுக்கொண்டே இருக்கின்றன.

மரங்களின் அடர்த்தியில் தொழிற்சாலை கண்ணுக்குப் புலப்படுவதே இல்லை!





**டாடா ஸ்டீல்**

